# மறைந்த மகான் மலை போன்றவர்

கே.எஸ்.ராமானுஜம்

"ஊருக்கெல்லாம் தோட்டியாக வாழ்ந்து வரும் பன்றி – வராகம் - தான் எங்கள் குலப் பெயர்" என்று பெருமையுடன் சொல்லிக்கொள்வார் டாக்டர் வராஹ வெங்கட கிரி.

"வராஹ ஸ்வாமியைத் தரிசிக்காமல் ஏழுமலையானை நாம் தரிசிக்கப் போவதுண்டா?" என்று கேட்பார்.

1975ம் வருஷம் ஜூன் 26ம் தேதி காலை திருவல்லிக்கேணி கங்கை மண்டபத்துக்கு அருகே, கடுமையான வெய்யில் வேளையில் ஒரு குடையின் கீழ் சாதாரண நாற்காலி ஒன்றில் உட்கார்ந்தவாறே 'சுத்தமான சென்னை – அழகிய சென்னை" என்கிற சமூக இயக்கத்தைத் தொடங்கி வைத்தார். அன்றிலிருந்து தமது கடைசி மூச்சு வரை நகரின் பல பாகங்களிலும் "சுத்தமான சென்னை" இயக்கத்தை ஊக்குவித்து வந்தார்.

50 ஆண்டுகளுக்கு முன் சென்னையில் குடியேறிய கிரி இந்தப் பட்டினத்தை மிகவும் நேசித்தார். எங்காவது வெளியே போகும் போது திடீரென்று காரை நிறுத்தச் சொல்லி இறங்கி அங்குள்ள பொதுக் கழிவு இடங்கள் சுத்தமாக இருக்கின்றனவா என்று உள்ளே போய்ப் பார்ப்பார்... சமீபத்தில் கொத்தவால்சாவடிக்கு விஜயம் செய்து, அந்தப் பகுதியை ஒரு கலக்குக் கலக்கினார்.

மெரினா கடற்கரையின் அசுத்தத்தைப் பார்த்துப் பெரியவர் கிரி கண் கலங்கியதுண்டு.

"நமது ஊரை நாம்தானே சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்? இந்த எண்ணம் நம் மக்களுக்கு ஏன் ஏற்படுவதில்லை" என அவர் அடிக்கடி மனம் நொந்து கூறுவதைக் கேட்டிருக்கிறேன்.

• • •

"எனக்குக் குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியம் நன்றாகப் புரிகிறது. ஆனால் குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரசாரத்தில் தீவிரமாக ஈடுபட அருகதையற்றவனாகி விட்டேன்" என்று அடிக்கடி சொல்லுவார் கிரி. "நான் பதினைந்து குழந்தைகளுக்குத் தகப்பனார். எனக்கு 28 பேரக் குழந்தைகளும், 9 கொள்ளுப் பேரக்குழந்தைகளும் பிறந்திருக்கிறார்கள். இதைப் பற்றிப் பெருமைபட்டுகிறேன்" என்பார். அவருடைய வீடு எப்போதும் கலகலப்பாக இருக்கும். சதா உறவினர்கள், நண்பர்கள் வந்து போவார்கள். வித்தியாசமின்றி அங்கு எல்லோருக்கும் ஒரே மாதிரி உபசரிப்பு உண்டு.

இரண்டு வருடங்களுக்கு முன்பு காலமாகி விட்ட தம் மனைவியிடம் தனி மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார் கிரி. அவரிடம் கொஞ்சம் பயப்படுவார் என்றும் சொல்லுவார்கள். "இது உண்மைதானா?" என்று கேட்டபோது அவர் சொன்ன பதில்: "என் மனைவி சரஸ்வதியைக் கலந்தாலோசிக்காமல், அவள் அபிப்பிராயத்தை அறியாமல் நான் ஒரு காரியமும் செய்ததே இல்லை. இதை நீங்கள் எப்படி வேணுமானாலும் அர்த்தம் பண்ணிக் கொள்ளுங்கள்!"



நன்றாக ருசித்துச் சாப்பிடுவார் கிரி. ஒரு முறை தமது விசேஷ ரயிலில் சென்னையிலிருந்து புறப்பட்டார். காலை 8 மணிக்குச் சிற்றுண்டிக்குக் குடும்பத்துடன் உட்கார்ந்தார். ரவா கேசரி மிகவும் ருசியாக இருந்தது. மறுபடியும் போடுமாறு கேட்டார். ''உடம்புக்கு ஒத்துக்கொள்ளாது'' என்று சரஸ்வதி கிரி தடுத்துவிட்டார். சிற்றுண்டி முடிந்து தமது அறையில் 9 மணி சுமாருக்கு தினசரிப் பத்திரிகைகளைப் படித்துக் கொண்டிருந்த கிரி திடீரென்று தம் பணியாளை அழைத்து ''அம்மா எங்கே?'' என்று கேட்டார். ''குளிக்கப் போயிருக்கிறார்கள்'' என்றான் அவன். ''அப்படியானால் சரி. சமையல் அறைக்குப் போய் எனக்குக் கொஞ்சம் ரவா கேசரி கொண்டு வரச் சொல்லு. ரொம்ப ருசியாக இருந்தது'' என்றார். தாம் ஜனாதிபதியாயிற்றே, இப்படியெல்லாம் கேட்கலாமா என்று கவலைப்படாத குழந்தை உள்ளம் அவருடையது.

• • •

இறந்துவிடுவோமோ என்று என்றும் பயப்பட்டதே இல்லை கிரி. போன வருஷம் ஒரு நாள் உடம்பு முழுதும் ரொம்ப வலித்ததாம்



சஞ்சய்
வாழ்க்கை வரலாறு
கி. கஸ்தூரிரங்கன் எழுதுகிறார்
அடுத்த இதழில் ஆரம்பம்

அவருக்கு. படுக்கப் போகும்போது தமது முடிவு காலம் நெருங்கி விட்டதோ என்று கூட நினைத்தாராம். இருந்தாலும் அதைப் பற்றி ஒருவரிடமும் சொல்லாமல் படுத்துத் தூங்கிவிட்டாராம். காலம் சென்ற அவர் மனைவி கனவில் தோன்றி ''உங்களுக்கு ஒன்றும் இல்லை; கவலைப்படாதீர்கள்'' என்று தடவிக் கொடுத்துச் சொன்னாராம். காலையில் எழுந்தபோது வலி ஒன்றும் இருக்கவே இல்லையாம்!

• • •

1954ம் வருஷம். மத்திய மந்திரி சபையில் தொழில் அமைச்சராக இருந்தார். பாங்கு ஊழியர்களுக்குச் சாதகமாக மூவர் கொண்ட ஒரு கமிஷன் தன் சிபாரிசை அளித்திருந்தது. அதன்படி நடந்தால் நாட்டின் நிதி நிலைமையைப் பாதிக்கும் என்று அப்போது நிதி மந்திரியாக இருந்த தேஷ்முக்கும் தொழில் அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரியும் கருத்துத் தெரிவித்தார்கள். மூன்று பேர் கொண்ட கமிஷனில் பதவி வகித்த ஜஸ்டிஸ் சந்திரசேகர் கடைசிக்கட்ட முடிவுகளில் உடல் நிலை சரியில்லாததால் கலந்துகொள்ளவில்லை. இதைக் காரணம் காட்டி இந்த முடிவை ஏற்றுக்கொள்ள முடியாது என்று சர்க்கார் சொல்லிவிட வேண்டும் என்பதே அவர்கள் வாதம். ஆனால் தொழிலாளர் அமைச்சர் கிரி வங்கிகள் கமிஷனின் தீர்ப்பு சரியேதான் என்று வாதித்தார். நேருஜி கிரியின் வாதத்தை ஒப்புக்கொள்ளவில்லை. கிரி தமது ராஜிநாமாக் கடிதத்தில் ஒரு வார்த்தை கடுமையாகவோ, தவறாகவோ விழுந்துவிடக் கூடாது என்று கவலைப்பட்டார். அதே நேரத்தில் ராஜினாமாவை வாபஸ் வாங்கச் சொல்ல நேருஜிக்கு இடம் தந்துவிடக் கூடாது என்றும் உறுதியாக இருந்தார். எனவே வார்த்தைகளை சர்வ ஜாக்கிரதையாகப் பிரயோகித்தார். கடிதத்தை எழுதி முடிக்கப் பத்து மணி நேரம் ஆயிற்று!

''வங்கிகள் வளர்ந்துகொண்டிருக்கின்றன. அவைகளின் வருங்காலம் நன்றாகவே இருக்கும். அதன் ஊழியர்களுக்கு வருவாய் அதிகரிப்பதனால் அவர்கள் மேலும் ஊக்கமடைய வங்கிகளின் நிதி நிலை மேலும் அபிவிருத்தி அடையும்'' என்பதே கிரியின் வாதம். அதுமட்டுமின்றி, ''எப்போது ஒரு கமிஷன் தீர்ப்பு அளித்து விட்டதோ அதைக் கௌரவிக்க வேண்டும். அப்போதுதான் இதை முன்மாதிரியாகக் கொண்டு நாட்டின் எதிர் நோக்கும் இதர பிரச்னைகளுக்கு சுமுகமான சூழ்நிலையில் முடிவு காண முடியும்'' என்றும் கூறினார். கிரியின் ராஜினாமா ஒப்புக்கொள்ளப்பட்டது. பாங்க் அவார்டை மறு பரிசீலனை செய்வதற்காக ஏற்படுத்திய கஜேந்திர கட்கர் கமிஷனும் கிரியின் யோசனையே சரியென்று சொல்ல, இரண்டு வருஷங்களுக்குப் பிறகு பாங்கு ஊழியர்களுக்கு நியாயம் கிடைத்தது.

• • •

பண்டித கோவிந்த வல்லப பந்திற்கு கிரி அவர்களிடம் மிகுந்த மதிப்பு உண்டு. மத்திய உள்துறை அமைச்சராக இருந்த அவர் கிரி அவர்களை ராஜஸ்தான் கவர்னராகப் போகும்படி கேட்டுக் கொண்டார். ஆனால் கிரியோ ''பிரச்னைகள் நிறைய உள்ள மாநிலத்தை விரும்புகிறேன்'' என்று முடிவாகச் சொன்னார். அதன்படியே உத்திரப் பிரதேசத்தில் அவரைக் கவர்னராகப் போட்டார்கள். தொடர்ந்து கேரள, கர்னாடக மாநிலங்களில் கவர்னராக சுமார் 15 வருட காலம் பணியாற்றி (மாநில கவர்னராக ஒரு நபர் இவ்வளவு வருஷங்கள் இருந்ததே இல்லை.) 1967ம் ஆண்டு உதவி ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். 1969ல் டாக்டர் ஜாகிர் உசேன் திடீரென்று காலமானதையொட்டி தற்காலிக ஜனாதிபதியாகப் பதவி ஏற்றார். ஆனால் 1969 ஜூலை

மாதம் பெங்களூரில் அப்போதிருந்த ஒன்றுபட்ட காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் சஞ்சீவ ரெட்டியைக் காங்கிரஸ் கட்சியின் வேட்பாளர் என்று அறிவித்தது. கிரி விடுவதாக இல்லை. தமது தாற்காலிக ஜனாதி பதவியை ராஜினாமாச் செய்துவிட்டு சொந்த ஹோதாவில் தனித்துப் போட்டியிட்டார். ஊர் ஊராகச் சென்று எல்லா அரசியல் கட்சித் தலைவர்களுடனும் தாமே வாதாடித் தம் நிலையை விளக்கினார்.

இந்திரா காந்திக்கும் காங்கிரஸ் மேலிடத் தலைவர்களுக்கும் இடையே கசப்பு உணர்ச்சி பெருகிக் கொண்டிருந்த நேரம். வாக்கெடுப்புக்குச் சில நாட்களுக்கு முன்பு இந்திரா காந்தி தாமும் கிரி அவர்களையே ஆதரிப்பதாக அறிக்கை விட்டார். ''மனச்சாட்சியின்படி இந்த முடிவுக்கு வந்துவிட்டேன்'' என்றார்.

இந்திரா காந்திதான் சஞ்சீவ ரெட்டியின் நியமனப்பத்திரங்களில் கையெழுத்திட்டவர். அதனால் அவருடைய அந்த முடிவு தேசத்தையே உலுக்கியது. ஆனால் கிரியின் வாய்ப்புக்கள் திடீரென்று அதிகரித்து அந்த மிகக் கடுமையான ஜனாதிபதி பதவிப் போட்டியில் அவருக்கு வெற்றியைத் தேடிக் கொடுத்தது.

கிரிக்கு மிகவும் வருத்தத்தை ஏற்படுத்தி வந்த விஷயம் ஒன்று உண்டு. எப்படியோ அவருக்கு ''ரப்பர் ஸ்டாம்பு ஜனாதிபதி'' என்கிற பெயர் ஒட்டிக் கொண்டது. ''இந்திரா காந்தி முடிவின்படியெல்லாம் இவர் ஆடுகிறார்'' என்று எல்லோரும் பேசவும் எழுதவும் தொடங்கி விட்டார்கள். ''இது சுத்தப் பொய். மிகவும் தப்பான பேச்சு'' என்று வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டே இருந்தார் கிரி. தமது சுயசரித்திரத்திலும் விரிவாக இதைப் பற்றி எழுதி, ஆதாரங்களுடன் தாம் அப்படி நடந்ததே இல்லை என்று வாதித்திருக்கிறார்.

• • •

சஞ்சய் காந்தி இறந்து விட்டதாக 23ம் தேதி திங்கள் அதிகாலையில் கிரி கனவு கண்டாராம். உடனே தமது பேரனை எழுப்பி தாம் கண்ட கனவைச் சொல்லியிருக்கிறார்.

காலைச் செய்தியில் அப்படிப்பட்ட செய்தி ஒன்றும் வரவில்லையாதலால் கொஞ்சம் நிம்மதி அடைந்தார். இருந்தாலும் மறுபடியும் தாம் கண்ட கனவைப் பற்றித் தமது மூத்த மகன் சங்கர் கிரியிடம் சொல்லியிருக்கிறார். காலை 10 மணி அளவில் சஞ்சய் காந்தி விமானவிபத்தில் காலமானது கேட்டு 'ஐயோ' என்று சொல்லிக் கொண்டே இடிந்து உட்கார்ந்து விட்டார். ''என் மகள் இந்திராவை எப்படித் தேற்றுவேன். அவளுக்கு இனி யார்?'' என்றெல்லாம் புலம்பிக்கொண்டே இருந்தாராம், நாள் பூராவும். ஒருகால் சஞ்சய் இறந்து 24 மணி நேரத்துக்குள்ளாகவே பெரியவர் கிரியும் காலமானதற்கு இதுவே ஒரு காரணமாக இருக்கலாம்.

• • •

தாம் ஆசையாகக் கட்டி கடந்த 40 வருஷங்களாக வாழ்ந்து வந்த, மாம்பலம் கிரி ரோடில் உள்ள தமது சொந்த இல்லத்திலேயேதான் தமது மரணம் சம்பவிக்கவேண்டும் என்று விரும்பினார் கிரி. அதுமட்டுமல்ல, அந்த வீட்டைத் தேசத்துக்கு அர்ப்பணித்துவிட விரும்புவதாகவும் இரண்டு மாதம் முன்பு நான் அவரைப்பார்க்கச் சென்றபோது சொன்னார். தாம் காலமாவதற்கு இரண்டு நாட்கள் முன்புகூடத் தம்மைப் பரிசோதிக்க வந்த டாக்டர் சொக்கலிங்கத்திடமும் இதையே சொல்லியிருக்கிறார். ''எனது குடும்பத்தினர் அனுமதியைப் பெற்று விட்டேன். இனிக் கவலையே இல்லை. என்னைத் தேசத் தொண்டர்களில் ஒருவனாகப் பெருமைப்படுத்திய நாட்டுக்கே எனது சொந்த வீடு உரிமையாகட்டும்'' என்று கூறியுள்ளார்.

• • •

ஒருமுறை நேருஜி இவரிடம், ''கிரி, நீங்கள்தான் எல்லோரையும் விட மிகவும் வேகமாக நடப்பதாக ஒரு பேச்சு அடிபடுகிறதே. என்னை விடவா வேகமாக உங்களால் நடக்க முடியும்?'' என்று கேட்டார். அதற்கு கிரி பணிவன்புடன் ''ஜவாஹர்லால்ஜீ, இந்தச் சர்ச்சை எதற்கு? நீங்கள்தான் வேகமாக நடக்க முடியும் என்பதை ஒத்துக்கொள்கிறேன்'' என்று பதிலளித்தார். நேருஜி விடவில்லை. போட்டி நடந்தே ஆகவேண்டும் என்று தீர்மானமாகக் கூறிவிட்டார். நேருஜி எந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தாலும் சரி என்று சொல்லிவிட்டார் கிரி. 200 படிகள் உள்ள ஒரு படிக்கட்டில் போட்டி நடந்தது. நேருவை விட ஒன்றரை நிமிஷங்கள் முன்பாகக் கிரி ஏறிவிட்டார். நேரு அவரைத் தழுவியவாறே ''எல்லோரும் பேசிக்கொள்வது உண்மை என்று நிரூபித்து விட்டீர்கள். இன்று போல் என்றும் திடகாத்திரமாக நீங்கள் வாழ்ந்து வரவேண்டும்'' என்று உளமாற வாழ்த்தினார். நேருஜி, கிரியை விட வயதில் கொஞ்சம் தான் பெரியவர். ஆனாலும் நேருவை விட 16 வருஷங்கள் அதிகமாக வாழ்ந்தார் கிரி.

முன்னாள் ஜனாதிபதி கிரி அவர்களை நான் பார்த்தது இல்லை. ஆனால் கடிதத் தொடர்பு இருவருக்கும் 25 ஆண்டுகளாக உண்டு. ஏறக்குறைய 30 தபால்கள் வரை சேகரித்து வைத்துள்ளேன். 4-6-71ல் ஒரு தபால் எழுதினேன், ''நான் குடும்பத்துடன் உங்களைப் பார்க்க ஆசைப்படுகிறேன்'' அனுமதி வேண்டும் என. அதற்கு 16-6-71ல் அவரது டிப்டி செக்ரட்டரி ''சென்னைப் பக்கம் வரும்பொழுது சந்திக்க முயற்சிக்கவும்'' என எழுதினார். எனக்கு மகா கோபம்! ''நான் உங்களிடம் அனுமதி கேட்க டிப்டி செக்ரட்டரி பதில் தருகிறாரே'' என 24-8-71ல் தபால் எழுதினேன். பெருந் தன்மை கொண்ட கிரி, ஆகஸ்ட் 27, 1971ல் பதில் எழுதினார். ''அன்புள்ள நமச்சிவாயம், அந்தப்பக்கம் நான் வரும்போது நீங்கள் என்னைச் சந்திக்கலாம். நல்வாழ்த்துக்கள்'' என்று.

தொழிலாளிக்கு இவ்விதம் மதிப்பு தந்தார். அவர் படமும், அவரது துணைவியார் படமும் வேண்டுமென எழுதினேன். படங்கள் அனுப்பி எனது ஆவலைப் பூர்த்தி செய்தார். தபால் எழுதிய 5 தினங்களில் அவரிடமிருந்து எனக்குப் பதில் கிடைக்கும். இரண்டு நாளாய் அழுது கொண்டு இருக்கிறேன். - அருணா நமச்சிவாயம்

● திங்கட்கிழமைக் காலை ஏழரை மணிக்கு இந்திரா காந்தியிடம் தாம் விமான கிளப்புக்குச் செல்வதாகச் சொல்லிவிட்டு, தம் மோட்டார் வேனில் சஞ்சய் காந்தி சஃப்தர்ஜங் விமான நிலையத்துக்குச் சென்றார். (இங்கு ஃப்ளையிங் கிளப் விமானங்கள் தவிர வேறு விமானங்கள் வருவதில்லை.)

● விமான தளத்திலேயே ஒரு குவார்ட்டர்ஸில் வசிக்கும் காப்டன் சுபாஷ் சக்சேனாவின் வீட்டுக்கு முன்பு வேனை நிறுத்தி, சக்சேனாவைத் தம்முடன் பறக்க வருமாறு கூப்பிட்டார். சக்சேனாவின் பணியாள் டீ கொண்டுவந்தபோது, பறந்துவிட்டு வந்தபிறகு குடிப்பதாகச் சொன்னார்.

● சஞ்சய் பறந்த விமானமான 'பிட்ஸ்'ல் இரண்டு பேர்தான் பயணம் செய்ய முடியும். 1976ல் சஞ்சயின் நண்பரான தொழிலதிபர் கமல்நாத் அதை அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்தார். கஸ்டம்ஸ் இப்போதுதான் அதை விடுவித்தது. சென்ற வாரம் அது முதன் முறையாக வெள்ளோட்டம் விடப்பட்டது. சஞ்சய்க்கு கமல்நாத் விமானத்தைக் கொடுத்துவிட்டாராம்.



✕ இறுதி யாத்திரை

● ஞாயிறு காலை மேனகா, தீரேந்திர பிரம்மச்சாரி, ஆர்.கே. தவான் ஆகிய ஒவ்வொருவரையும் ஒரு ரவுண்ட் ஏற்றிச் சென்று பறந்து வந்தார். விமானம் குட்டிக்கரணம் போட்டபோது தமக்கே பயமாக இருந்ததாக பிரம்மச்சாரி கூறினாராம்.



● மறுபடியும் ஞாயிறு மாலை சஞ்சய் அந்த விமானத்தில் பறக்கச் சென்றார். தாம் செய்யும் வித்தைகளைப் பார்க்கும்படி மேனகாவிடம் சொல்லிவிட்டுப் போனார். மேனகாவும் 1, சப்தர்ஜங் ரோட் இல்லத்தின் தோட்டத்திலிருந்து பார்த்தாராம்.

● இந்திரா காந்தியின் முன்னாள் இல்லமான வெலிங்டன் கிரசண்டின் பின்னால் சுமார் இரண்டு பர்லாங்கு தூரத்தில் விமானம் விழுந்தது. விழும்போது மரங்களின் மேல் மோதவே சஞ்சய், சக்சேனா ஆகிய இருவருடைய உடலும் அதிகம் சேதமடையாது தப்பிற்று. இரண்டு பேருக்கும் மண்டையில் பலத்த அடி. சஞ்சயின் மூளையே வெளியே தெறித்துவிட்டதாக ஒரு தகவல். சக்சேனாவின் இடது பாகம் முழுவதும் பலத்த முறிவுகள். சஞ்சய்க்கு வலது பாகம். ஒரு கால் கூழாக நசுங்கிவிட்டது. மேஜர் என்று சொல்லக்கூடிய காயங்கள் மட்டும் சஞ்சய்க்கு 48 ஏற்பட்டிருந்தன என்று லோகியா ஆஸ்பத்திரியில் கூறினார்கள்.

● தையல் போட்ட பிறகுதான் உடலை மேனகா பார்த்தாராம். மேனகாவின் தாயார் லண்டன் சென்றிருந்தார். மேனகாவுக்குத் துயரைத் தாங்கிக்கொள்ள லேசான தூக்க மருந்து கொடுக்கப்பட்டதாம். மேனகா இரண்டு நாள் ஒன்றுமே சாப்பிடவில்லை.

● டில்லி ஃப்ளையிங் கிளப்பின் ஆசிரியரான காப்டன் ஷமீம், திங்களன்று காலை சஞ்சயிடம் பிட்ஸ் விமானத்தில் செல்வதைவிட 'புஷ்பக்'கில் பறக்கலாமே என்றாராம். "இல்லை; இன்றைக்கு இந்தச் சிவப்பு பிட்ஸில்தான் பறக்கப் போகிறேன்" என்றாராம் சஞ்சய். ஷமீம் அதன் பிறகு புஷ்பக்கில் பறந்தார். ஆனால் பிட்ஸின் மேல் கண் வைத்துக் கொண்டே இருந்தார். பிட்ஸ் சரசரவென்று விழுவதைப் பார்த்து, ரேடியோ மூலம் 'டவ'ருக்குச் செய்தி அனுப்பினார்.

இடது பக்கம்: இந்திரா காந்தி, மேனகா ✕ விமானத்துக்குள் ஏறும் சஞ்சய் ✕ இறுதிச் சடங்கு.







⁕ மலர் வளையம் வைக்கும் ராஷ்டிரபதி.

⁕ எம். ஜி. ஆர்., ராஜாராம்

⁕ கரண்சிங்

● சஞ்சயின் சகோதரர் ராஜீவ் குடும்பத்துடன் இத்தாலி சென்றிருந்தார். அவர் டில்லி வருவதற்காக ஒரு ஏர் இந்தியா விமானம் தனது ரூட்டைச் சிறிது மாற்றி ரோமில் இறங்கியது. ராஜீவ் குடும்பத்தினர் செவ்வாய் காலை 2 45 மணிக்கு டில்லி வந்தபோது, திரேந்திர பிரம்மச்சாரி வி.சி. சுக்லா, ஜெயில் சிங் விமான நிலையத்துக்கு வந்திருந்தனர். ராஜீவைப் பார்த்ததும் இந்திரா காந்தி தம் துயரத்தை அடக்க முடியாது அழுது விட்டார்.

● சஞ்சய் காந்தியின் உடலை 1, அக்பர் ரோடில் வைத்திருந் தார்கள். இது பிரதமரின் இல்லத்தை ஒட்டிய வீடு. இதுவும் பிரதமரின் வீட்டைச் சேர்ந்த பங்களாதான். சஞ்சய் காந்தியின் நெருங்கிய நண்பரான அமிதாப் பச்சன் துயரத் துடன் இருந்தார். சாந்திவனத்தில் ஒரு பக்கத்தில் தரையில் உட்கார்ந்து கன்னத்தில் கை வைத்தபடி சஞ்சயின் சமக்கிரியைகளைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

● சஞ்சயின் சமக்கிரியைகளுக்கு தாராசிங், சுனில்தத், நர்கீஸ், ரண்திர் கபூர் வந்திருந்தார்கள். அக்பர் ரோடில் சாரிகா வந்திருந்தார்.

● எம். ஜி. ஆர். தமது 11 சக மந்திரிகளுடன் வந்து இந்திரா காந்திக்கு ஆறுதல் கூறினார். சாந்திவனத்தில் அவரும் நெடுஞ் செழியனும தரையில் உட்கார்ந்து நிகழ்ச்சிகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர்.

● கருணாநிதி விமான நிலையத்திலிருந்து நேராக சஞ்சயின் உடலைப் பார்க்கச் சென்றார்.

● செவ்வாய்க் கிழமை பகல் சுபாஷ் சக்சேனாவின் உடல் யமுனைக் கரையில் தகனம் செய்யப்பட்டது. ஏராளமான பேர் இங்கும் குழுமியிருந்தார்கள். ராஜீவ் காந்தியும் வந் திருந்தார்.

● முதலில் யமுனைக் கரையில்தான் சஞ்சயைத் தகனம் செய்வதாக இருந்ததாம். பின்பு சாந்திவனம் என்று மாற் றப்பட்டு இடமும் குறிப்பிட்டு மேடைகள் கட்டப்பட்டன. சுமார் 200 ஊழியர்கள் இரவு முழுவதும் வேலை செய்தனர். செவ்வாய்க் கிழமை காலை ராஜீவ் காந்தி வந்து பார்வையிட்டு விட்டு நேரு சமாதியிலிருந்து இன்னும் சற்றுத் தள்ளி மேடையை அமைக்கச் சொன்னாராம். மறுபடியும் காலை 10 மணிக்கு வேலையை அசுர வேகத்தில் துவக்கி முடித்தார்கள்.

● விமான விபத்து செய்தி பிரதமருக்குத் தெரிவிக்கப்பட்ட சமயம், அவருடன் உத்திரப் பிரதேச முதல்வர் வி. பி. சிங்கும் கர்நாடக முதல்வர் குண்டு ராவும் இருந்தனர்.

● சஞ்சய் இறந்துவிட்டதாக டாக்டர்கள் கூறியதும் இந்திரா காந்தி, ''இனிமேல் எனக்கு இதைவிட என்ன ஆகப் போகிறது? என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். உங்கள் கடமைகளைச் செய்யுங்கள்'' என்றாராம்.

● சஞ்சய் காந்தி சென்ற வருடம் ஜூன் மாதம் 23ம் தேதிதான் (சரியாக ஒரு வருடத்துக்கு முன்பு) விமான ஓட்டி லைசென்ஸ் பெற்றார்.

● சஞ்சயின் உடலை பி. வி. சேத்தி, கமல்நாத், ஜெயில் சிங், ராஜீவ் முதலியவர்கள் தூக்கி வந்தார்கள்.

● சமக்கிரியைகள் முழுவதும் திரேந்திர பிரம்மச்சாரியின் மேற்பார்வையில் நடந்தது. மேடையில் அவர்தான் ராஜீ வுடன் கடைசிவரை இருந்தார்.

தொகுப்பு: **கமல்**

புகைப்படங்கள்: **தில்ராஜு**

1980 ஜூலை 6
ரௌத்திரி ஆனி 22
மலர்: 38 இதழ்: 49



# கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

---

சஞ்சய்யும் கிரியும் இறந்த செய்தி கோடி அடைந்த வருத்தத்தினூடே, மேலும் பலர் இறந்தது பற்றிய வதந்தி பரவிப் பலரைச் சிரிக்கவும் வைத்துவிட்டது. குறைந்தபட்சம் பத்துப் பேர் சென்னையில் அன்று செத்துப் பிழைத்தார்கள்! பாவம் நிருபர்கள், பிரபலஸ்தர்களுக்கு ஃபோன் செய்து, "நீங்கள் உயிரோடுதான் இருக்கிறீர்களா?" என்று கேட்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளானார்கள். நல்ல வேளை இப்படி விசாரணைக்கு உள்ளானவர்கள் கோபித்துக் கொள்ளாமல், சிரித்தார்கள். அதே நேரத்தில் "இன்னார் இறந்துவிட்டதாக நான் கேள்விப்பட்டேனே அது உண்மையா, பொய்யா?" என்று தங்கள் சந்தேகத்தையும் நிருபரைக் கேட்டுத் தெளிவு படுத்திக்கொண்டார்கள். "வதந்தி காட்டுத் தீயாகப் பரவியது" என்று சொன்னோரை நம்பாதவர்கள் பேரில் தவறில்லை. ஏனெனில் வதந்தி அதைவிட வேகமாகவே ராக்கெட் வேகத்தில் பரவுகிறது என்று அன்று கண்டோம்!

எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. ஏதோ ஓர் ஊரில் கல்கி செட்டியார் என்பவர் மரணமடைய, ஒரு தினசரி கொட்டை எழுத்துக்களில் "கல்கி காலமானார்" என்று பிரசுரிக்க, அன்று இந்தப் பத்திரிகையின் ஸ்தாபக ஆசிரியர் வீட்டில் ஒரே அமளி துமளி! அத்தனைக் கிடையிலும் அவர் இடி இடி யென்று சிரித்த சிரிப்பு! எத்தனை ஆண்டுகளானாலும் மறக்கக் கூடிய சிரிப்பா அவருடையது!

• • •

அயல் நாட்டுத் தூதுவர் ஒருவர் மாஸ்கோவில் இறந்துவிட அவர் சடலத்தை விமானத்தில் ஏற்றி அவர் தாய் நாட்டுக்கு அனுப்பி விடத் தீர்மானித்தனர். விமான நிலையத்தில் ராணுவ மரியாதை நடந்தது. விமானம் கிளம்பிச் சென்றது. அதிகாரிகள், அமைச்சர்கள் வீடு திரும்பிவிட்டனர். பிறகு பார்த்தால் சவப்பெட்டி விமான நிலையத்திலேயே தங்கி விட்டிருக்கிறது!

தவறு நேர்வது சகஜம்தான். ருஷ்ய அதிகாரிகளும் மன்னிப்புக் கோரியுள்ளனர். ஆனால் ருஷ்ய சர்க்கஸ் என்று பிரமாதப் படுகிறதே அவர்களால் கூட இந்த வித்தையைத் தூக்கி அடிக்க முடியாது! ருஷ்ய சர்க்கஸ் இதை வென்று காட்ட வேண்டுமானால் விமானத்தை விமான நிலையத்திலேயே இருக்கச் செய்து சவப் பெட்டியைத் தாய் நாட்டுக்குப் பறக்கச் செய்ய வேண்டும்!

கடவுள் பாடு ரொம்பத் திண்டாட்டம் தான். வெற்றி பெற்ற எம். ஜி. ஆர். மூகாம்பிகை கோவிலுக்குச் சென்று வழிபட்டுத் திரும்பினார்! தோற்ற கட்சியின் தலைவர் கருணாநிதியின் மனைவியும் மகளும் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் அர்ச்சனை செய்தார்கள்! கருணாநிதிக்குச் சனி தசை பிடித்திருப்பதால் சனி பகவானுக்கு விசேஷ அர்ச்சனை செய்தார்கள். உண்டியலில் காணிக்கை செலுத்தினார்கள். பாவம், கடவுள் இப்போது யாருக்கு அருள் புரிவது என்று புரியாமல் திண்டாடிக் கொண்டிருப்பார்! நாளை ஒரு தேர்தல் நடந்து அதில் தி.மு.க.வும் கருணாநிதியும் வெற்றி பெற்றால், கடவுளே கட்சி மாறியதாகிவிடுமே!

• • •

அண்மையில் நடந்த மின்விசை அமைச்சர்கள் மகாநாட்டில் பிரதமர் அருமையான யோசனை கூறியுள்ளார். "மின்விசையின் தேவைகளுக்கும் மேல் பத்து சதவிகிதம் மின்விசையின் உற்பத்தி இருக்க வேண்டும். அப்போதுதான் தொழிலகங்களின் வளர்ச்சிக்கு நாடு ஈடுகொடுக்க முடியும்" என்று இலக்கு நிர்ணயித்திருக்கிறார்.

ரொம்பச் சரி, ஆனால் மின்விசை அமைச்சர்கள் பிரதமரின் சொல்லைச் செயலாக்கிக் காட்ட வேண்டுமே? பருவ மழையை எதிர் பார்க்கும் நீர்மின் நிலையங்கள் தவிர, புதிய அனல் மின் நிலையங்கள் தோன்ற வேண்டுமே! இருக்கிற அனல்மின் நிலையங்களும் திறம்பட இயங்க வேண்டுமே! இதற்கு மின் வாரியங்களின் ஒத்துழைப்பு தவிர ரயில்வே அமைச்சகம் நிலக்கரி போக்குவரத்து தடைப் படாது கைகொடுக்க வேண்டுமே!

வெஸ்டிங்ஹவுஸ் என்ற அமெரிக்க மின்சார உபகரணங்கள் தயாரிக்கும் நிறுவனம் தனது ஒரு விளம்பரத்தில், மரண தண்டனை பெறுபவர் கடைசியாக அமரும் மின்சார நாற்காலியின் படம் போட்டு அதன் கீழே "வெஸ்டிங்ஹவுஸ் தயாரிப்பாக இருந்தால்" நீங்கள் நிச்சயம் நம்பலாம்!" என்று எழுதியது. அதே நாற்காலி இந்தியாவுக்கு வந்தால் நம்ப முடியாது சுவாமி நம்பவே முடியாது! மரண தண்டனை நிறைவேறப் போகும் சமயம் பார்த்து பவர் கட் வந்துவிடும்! அதுமட்டுமா? வோல்டேஜ் மாற்றங்களால் மின்சார நாற்காலியே பழுதாகிவிட்டாலும் வியப்பதற்கில்லை!

## செய்திகளை வாசிப்பது 'செம்பியன்'

# நட்சத்திரவடிவம்

## பரிசுத்திட்டம்-6

## போட்டி முடிவு



ஸ்ரீதேவியின் முழு உருவத்தையும் சரியான படி ஒட்டி அனுப்பியவர் ஒருவர் மட்டுமே.

ஏ. சந்திரன், சர்பத் ஸ்டால், பஸ் நிலையம் எதிர்ப்புறம், தொட்டியம் போஸ்டு, திருச்சி மாவட்டம்.

மிஞ்சும் தொகை ரூ. 225.

ஜாக்பாட்டுக்கு (11வது போட்டி) சேர்ந்துள்ள மொத்தத் தொகை ரூ. 1075.

ஜாக்பாட்டுக்குச் சேர்ந்துள்ள புகைப் படங்கள் 43.

புகைப்படம்: ஏ. சுந்தரம்

டெஸ்ட் டியூப் பேபி என்று அமர்க்களப் படுவது தெரியும். பெண்ணின் முட்டையையும் ஆணின் உயிரணுவையும் சோதனைச் சாலையில் இணைத்து ஒன்றை ஒன்று ஊடுருவச் செய்து சற்று வளர்ந்ததும் பெண்ணின் கருப்பைக்குள் வைக்கிறார்கள். கரு வளர்ந்து பிரசவம் ஆகிறது. இந்நாள்வரை ஆயுதப் பிரசவமாகவே இருந்தது — ஸிஸேரியன். இப்போது ஆஸ்திரேலியாவில் முதல் முறையாக இயற்கையான பிரசவமே ஆகியுள்ளது.

கரு வளர கருப் பையைத்தான் சரணடைய வேண்டியிருக்கிறது. விஞ்ஞானி சோதனைச் சாலையிலேயே குழந்தையை முழுமையாக உருவாக்கி விடவில்லை. ஆனால் இதுவே சாதனை என்று கருதப்படுகிறது.

கருப்பையை முட்டை அடைய முடியாதபடிக்கு உடலில் கோளாறு உள்ள பெண்ணுக்கு ஒருவேளை இந்தச் சாதனை குழந்தை பெற உதவலாம். மற்றபடி வேதனைதான்.

ஆஸ்திரேலியாவில் இப்போது பிறந்துள்ள குழந்தைக்கு ''மில்லியன் டாலர் பேபி'' என்று பெயர் வைக்கலாம். ஏனெனில் இந்த டெஸ்ட் டியூப் பேபி பிறக்கு முன் ஆராய்ச்சிகளுக்கு ஆகியுள்ள செலவு 1.2 மில்லியன் டாலர்கள்!

# அட்மிஷன்!

பிரின்ஸ்பால்: என்னப்பா சீட் இல்லே என்று சொன்ன பிறகும் ஏன் நின்று கொண்டிருக்கிறாய்?

வந்தவர்: சீட் இல்லே என்று சொன்னதால் தான் நின்று கொண்டிருக்கிறேன். இருக்கு என்றால் உட்கார்ந்து கொண்டிருப்பேனே!

●

''எப்படியாவது என் மகனுக்கு அட்மிஷன் தாங்க, நல்ல மார்க் வாங்கியிருக்கான் என்றேன்.''

''என்ன சொன்னார்கள்?''

'' 'ஆகட்டும் பார்க்கலாம்' என்றார்கள்.''

''எந்தக் காலேஜில்?''

''காமராஜ் பல்கலை கழகத்தில்!''



●

''காலேஜில் அட்மிஷன் வேண்டும் என்றால் ம. பொ. சி. யோடு போனால் கிடைக்கும்.''

''அவர் ரொம்பப் பிஸியா இருப்பார். எப்படி சார் அவரை அழைத்துக்கொண்டு போவது?''

''நான் அதைச் சொல்லவில்லை சார். மதிப்பெண், பொருள், சிபாரிசு மூன்றும் சேர்ந்து போனால்தான் அட்மிஷன் கிடைக்கும்.''

- எஸ். சந்திரசேகர்


கர்ப்பிணிப் பெண்ணை நிர்வாணமாக்கி போலீஸ் வீதியில் இழுத்துச் சென்றது!
—செய்தி
என்னப்பாது! நாயைப் பழக்கி இருக்கிற லட்சணம்?..
எஜமானியம்மா மேலேயே பாயுதே!...
மக்கள்
போலீஸ்


குடையைக் கவனியுங்க! அலங்காரத்தையே ஏன் பாத்துகிட்டு இருக்கீங்க?
பா.ஜ


ஆப்கனில் ரஷ்ய ஆக்கிரமிப்பு
பெரும்பான்மை நாடுகள் புறக்கணிப்பு
மாஸ்கோ ஒலிம்பிக்ஸ்

# எதிரொலி

அன்னம்

அவனும் அவளுமாக ஹைகோர்ட் வராந்தாவில் நடந்து வந்து கொண்டிருந்தார்கள். மதுரையிலிருந்து சென்னையைச் சுற்றிப் பார்க்க வந்திருந்தார்கள். இருவருக்கும் திருமணமாகி இரண்டு வருஷங்கள் ஆகின்றன.

கல்யாணமானவுடன் எங்கும் 'ஹனிமூன்' போக முடியாதபடி சில சிக்கல்கள். ஒரு வருடத்துக்குள் பின்னையும் பிறந்து விட்டான். கைக் குழந்தையுடன் வெளியே எங்கும் புறப்பட முடியவில்லை. இப்போது குழந்தையைத் தாயாரிடம் விட்டுவிட்டுப் பத்து நாட்கள் இஷ்டப்படி சுற்ற வந்திருந்தார்கள்.

ஹைகோர்ட் கட்டடத்தை மட்டும் சுற்றிப் பார்க்க வந்தவர்கள் தற்செயலாக ஒரு வழக்கு நடத்தப்படுவதைக் கவனித்தார்கள். அது ஒரு விவாகரத்து வழக்கு எனத் தெரிந்ததும் அவர்கள் கவனம் தீவிரமாகியது.

அன்று வழக்கில் தீர்ப்புக் கூறப்படும் நாள்.

கணவன், மனைவி இருவரும் வேலை பார்க்கிறார்கள், அவர்களைப் போலவே. மனைவிக்குக் கணவனைவிட அதிகச் சம்பளம். கணவனுக்கு ஊர் சுற்றும் வேலை. அப்படி வேலை நிமித்தம் போன இடத்தில் ஒரு தொடர்பு ஏற்பட்டு விடுகிறது. அவன் திருந்தி வாழ்வதாகக் கூறினான். மனைவியின் தன்மான உணர்ச்சி அதற்கு இடமளிக்கவில்லை. வழக்குத் தொடர்ந்துவிட்டாள்.

நீதிபதி தன் தீர்ப்பின் முடிவில் கூறிய சில வாக்கியங்கள் வேடிக்கை பார்க்க வந்திருந்த இவர்கள் மனத்தைத் தொட்டன.

'திருமணம் என்பது வெறும் உடல் உறவின் அடிப்படையில் மட்டும் அடங்குவது இல்லை. மனம் ஒப்ப வேண்டும். மனுதாரர் தம் நிலையை விளக்கமாகக் கூறியிருக்கிறார். எப்படி ஒரு கிழிந்த ஆடையை உடுத்திக் கொண்டு வெளியே வர முடியாதோ எப்படி கெட்டுப்போன உணவை உட்கொள்ள முடியாதோ அப்படியே வழி தவறிய கண்டவனுடன் வாழ்க்கை நடத்த முடியாது எனக் கூறியிருக்கிறார். நான் அதை ஏற்கிறேன். மனப் பொருத்தம் இல்லாததால் இவர்கள் இல்வாழ்க்கை செல்லாக் காசாகிவிட்டதால் இனி இவர்கள் விருப்பப்படி பிரிந்து போக



விடுவதைத் தவிர வேறு வழியில்லே. எதிர் மனுதார் தன்னுடைய தவருன நடத்தைக்குக் கொடுத்துள்ள காரணங்கள் ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இல்லே. தனிமை... சூழ்நிலே ஆகியவை தன்னே அம்மாதிரி செய்யத் தூண்டின என்கிருர். ஒரு முறை தவறுவது இயற்கை. தொடர்ந்து செய்வது மன்னிக்க முடியாதது.... ஆகவே....''

நீதிபதி விவாகரத்துக்கு அனுமதி வழங்கிவிட்டார். கோர்ட் இடைவேளேக்காகக் கலேந்தது.

• • •

தீர்ப்பைக் கேட்ட இவர்கள் மனத்தில் ஏதேதோ நினேவுகள். அதன் விளேவாக மௌனம்.

''என்ன யோசனே?'' என்று கேட்டான் அவன்.

''ஒன்றுமில்லே....'' என்ருள் அவள்.

தொடர்ந்து இருவரும் பேசாமல் நடந்தார்கள்.

''கோர்ட்டில் விவாகரத்து அவர்களுக்குத்தான் தீர்ப்பு ஆகியிருக்கிறது... நமக்கு இல்லே.'' எனச் சிரிக்க முயன்றவன் அவள் பார்வையைக் கண்டு தன் தலேயைத் தாழ்த்திக்கொண்டான்.

''சிரிக்காதீர்கள்.... அந்தப் பெண்ணேப் பார்த்தால் எனக்குப் பாவமாக இருக்கிறது'' என்ருள் அவள்.

''அவளுக்கு ஏன் இரக்கப்பட வேண்டும்? வீட்டு விவகாரத்தை அம்பலத்துக்குக் கொண்டுவந்து கட்டிய புருஷனேச் சந்தி சிரிக்க வைத்தாகிவிட்டது'' என அலுத்துக்கொண்டான் அவன்.

அவள் பதில் சொல்லாமல் நடந்தாள்.

''பசிக்கிறது.... இது சாப்பிடுகிற நேரம்'' என ஞாபகப்படுத்தினுன்.

''எனக்குப் பசிக்கவில்லே'' என்ருள் அவள்.

''அப்படியானல் நீ பட்டினி கிட... என்னுல் முடியாது!'' என்று அவன் ஹோட்டலுக்குள் நுழைந்தான்.

தனக்கு மட்டும் ஒரு டிக்கட் வாங்கிக் கொண்டான். அவள் எதிரில் உட்கார்ந்திருக்க, இவன் மட்டும் ரசித்துச் சுவைத்துச் சாப்பிட்டான். 'ஆஹா!' என்று ஏப்பம் விட்டான். ''சாம்பார் ஏ கிளாஸ்... ரசம் பிரமாதம்!'' என சர்டிபிகேட் கொடுத்தான்.



ஏதோ எண்ண ஓட்டத்தின் விளேவாகப் பசிக்கவில்லே என்று கூறியவள் தன் கணவனே வெறுப்புடன் பார்த்தாள். சே! என்ன சுயநலம் அவனுக்கு?

''அடுத்தபடியாக நாம் எங்கே போகிறோம்? சினிமாவுக்குத்தானே?'' என்று கேட்டான் அவன்.

''இல்லே.... ரூமுக்கு'' என்ருள்.

பக்கத்தில் நின்ற ஆட்டோ ஒன்றை அமர்த்திக்கொண்டு நேராகத் தங்கியிருந்த லாட்ஜுக்குப் போனுர்கள். வாசலில் இறங்கிய அவன் ''இந்தா சாவி... நீ போய் ரூமில் இரு. நான் அறைக்குள் அடைபட்டுக்கிடக்க இங்கு வரவில்லே'' எனச் சொல்லியபடி அதே ஆட்டோவில் புறப்பட்டு விட்டான்.

அவன் போவதற்கும் அந்த ஆங்கிலப் படம் தொடங்குவதற்கும் சரியாக இருந்தது. அதில் அப்படியே லயித்துப் போனவன் வெளியே வந்தபோது மணி ஐந்து. தான் அவளிடம் அத்தனே மூர்க்கமாக நடந்து கொண்டிருக்கக் கூடாது எனத் தோன்றியது. ''ஏன் பசிக்கவில்லே?'' என்று கேட்டிருக்க வேண்டும். அவளுடன் பேசி மனத்தை மாற்றிசினிமாவுக்கும் அழைத்துப் போயிருக்க வேண்டும்...

ஹோட்டலில் டிபன் பார்சலும், பக்கத்தில் பூப்பொட்டலமும் வாங்கிக்கொண்டு லாட்ஜுக்குத் திரும்பினுன். அவன் அறை பூட்டப்பட்டு இருந்தது. ரிசப்ஷனில் சாவியைக் கொடுத்தார்கள்.

அவனுக்கு ஆத்திரம் பிறீட்டது. அறைக்குள் நுழைந்து பொட்டலங்களேத் தூக்கி எறிந்தான். ஹோட்டல் பையனேக் கூப்பிட்டு இரண்டு பாக்கெட் சிகரெட் வாங்கிக் குடித்துத் தீர்த்தான்.

எட்டு மணிக்கு அவள் வந்தாள். புகையின் நெடியை நுகர்ந்தவுடன் முகம் சுளித்தாள்.

''இந்தப் பழக்கம் மறுபடியும் ஆரம்பித்து விட்டதா?'' என்று கேட்டாள்.

''திடீர் என்று புதுப் பழக்கம் உனக்குத் தொடங்கும்போது நான் ஏன் பழையதைப் புதுப்பிக்கக் கூடாது?''

''என்ன புதிர் போடுகிறீர்கள்?''

''புதிர் போடவில்லே. அவிழ்க்கிறேன். உன் சுயரூபத்தை இப்போதுதானேகாட்டுகிருய்?''

''சுயரூபமா? இத்தனே நாள் நான் என்ன வேஷம் போட்டு மயக்கினேனு?''

''உன் மனத்திற்கே தெரியும். என்னே விட்டுவிட்டு இதுவரை எங்கேயாவது போயிருப்பாயா?''

''இவ்வளவுதானு? பகலில் பெரியவர்கள் என்னேக் கூட்டிக் கொண்டுதான் வெளியே போனீர்களாக்கும்?''

''நான் ஆண்பிள்ளே.....ய் தற்காக?''

அவள் சிரித்தாள். ''இது இருபதாம் நூற்ருண்டு. என் கணவரே! ஆண்பிள்ளே, பெண் பிள்ளே என்றெல்லாம் தனிச் சலுகை கேட்க முடியாது. கேட்கவும் கூடாது''

''படித்த பெண்களேக் கட்டிக் கொண்டால் இப்படித்தான்.''

''படித்த பெண்.... அதுவும் சம்பாதிக்கிற பெண்தான் வேண்டும் என்று அவ்விடத்தில் சொன்னதாக எனக்கு ஞாபகம்.''

''ஸ்டாப் இட்!.. உன் இன்டலுக்கு எல்லாம் எனக்குப் பதில் சொல்ல 'மூட்' இல்லே. நீ எங்கே போயிருந்தாய்?''

''நான் போகக் கூடாத இடத்துக்குப் போயிருக்க மாட்டேன் என்ற நம்பிக்கை உங்களுக்கு இருந்தால் இந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்லத் தேவையில்லே. அப்படி ஒரு சந்தேகம் உங்களுக்கு இருந்தால் நான் பதில் கூறியும் பிரயோசனமில்லே.''

அவன் கோபத்துடன் எழுந்தான். அவள் கன்னத்தில் 'பளார்' என்று ஒரு அறை விட்டான். ''இது என்ன பாண்டியன் சபையா? நீ என்ன கண்ணகியா?''

அவள் அடிபட்ட கன்னத்தைத் தடவிக் கொண்டாள். ''வெரி குட்! வெரி குட்! மெட்ராஸுக்கு என்னே அழைத்து வந்து என் கணவர் எனக்கு நான் ஆசைப்பட்டதை யெல்லாம் வாங்கித் தருவார் என நினைத்தேன். எதிர்பார்க்காதது பலமாகவே கிடைத்து விட்டது.'' அவள் குரல் கம்மியது. விசும்ப ஆரம்பித்தாள்.

''பெரிதாக அழுது ஊரைக் கூட்டாதே. நான் இதற்கெல்லாம் பயந்தவன் இல்லே.''

''எதற்கும் துணிந்தவர் என்றுதான்நான் புரிந்து கொண்டு விட்டேனே!''

''நான் இப்போ என்ன கொலையா பண்ணி விட்டேன்? நீ பசிக்கவில்லே என்றாய் எனக்குப் பசித்தது நான் சாப்பிட்டேன். நீ வரவில்லே என்றாய். நான் சினிமாவுக்குப் போனேன். இதற்காகக் கொஞ்சம் கூடப் புருஷன் என்ற மரியாதை இல்லாமல் பதிலுக்குப் பதில் ஊரைச் சுற்றியிட்டு....''

''நிறுத்துங்கள்!.... ஊர் சுற்றிவிட்டு என்றெல்லாம் சொன்னால் நான் பொறுத்துக் கொள்ள மாட்டேன். உங்களைப் போல் நானும் படித்தவள்தான். வேலே பார்க்கிறவள். எனக்கும் மானம் ரோஷம் உண்டு!''

''ஓஹோ! கோர்ட்டில் அந்த அடங்காப் பிடாரியைப் பார்த்ததும் அம்மாவுக்கும் சுதந்திரம் கேட்கிறதாக்கும்!''

''அவள் மேல் என்ன தப்பு? புருஷன் என்ன செய்தாலும் பொறுத்துக் கொள்ள இங்கே நளாயினியாக இருக்க முடியாது....''

''இதோ பார்... உன்மீது நான் சந்தேகப் படவில்லே. எங்கே போனாய்?''

''கேட்கிற விதத்தில் கேட்டால் பதில் தன்னால் வரும்.... புருஷன் என்ற அதிகாரத்தைக் காட்டினால் என்னாலும் நான் யார் என்பதை நடத்திக் காட்ட முடியும்.''

''சரிதான். நீ எனக்கு அடங்கி நடக்கிற மாதிரி இல்லே.''

''இதோ பாருங்கள்.... எவ்வளவோ சந்தோஷமாக வந்தோம். தப்பு உங்கள் மேலேயோ என் மேலேயோ நம் உறவில் ஒரு விரிசல் வந்து விட்டது.''

''அதற்காக நாளைக்குக் கோர்ட்டுக்குப் போய் விவாகரத்து கேட்க முடியுமா?''

''கரெக்ட்! நான் சொல்லத் தயங்கினேன். நீங்கள் உடைத்து விட்டீர்கள். உங்கள் மனத்தில் இருந்தது வெளிப்படையாக வந்து விட்டது.''

''குடித்தனம் நடத்த மாட்டேன் என்று வீம்பு பிடிப்பவர்களுடன் ஒட்டிக்கொள்ள எனக்கு ஒன்றும் ரோஷம் இல்லாமல் போக வில்லே'' என்றான் அவன்.

அன்று இரவு....அந்த டபுள் ரூமில் இருந்த கட்டில்கள் தனித் தனியாகப் பிரிந்தன. அவனும் அவளும் மங்கிய நீல வண்ண ஒளியில் மோட்டு வளையைப் பார்த்தபடி உறங்காமல் நீண்ட இரவைக் கழித்தனர்.

மறுநாள் காலே. ஒரு டாக்சியில் பின் சீட்டில் அவளும், முன் சீட்டில் அவனுமாக வக்கீல் வீட்டுக்குப் போனார்கள். அந்தப் பெண்ணுக்காக முதல் நாள் வாதாடி, வழக்கில் வெற்றி பெற்ற அதே வக்கீல். முதல் நாள் அவர்களைக் கோர்ட்டில் பார்த்ததாக அவர் குறிப்பிட்டார்.

இருவரும் தங்களால் மனம் ஒத்துப்போய்க் குடித்தனம் நடத்த முடியாததற்காக விவாகரத்துப் பெற்றுத் தரும்படி கேட்டார்கள்.

''இதுதான் உங்க உறுதியான முடிவா?'' என்று கேட்டார் வக்கீல்.

''ஆமாம்'' என்றனர் இருவரும்.

''மாலையில் வாருங்கள்... வேண்டிய ஏற்பாடு செய்து வைக்கிறேன்'' என்றார் வக்கீல்.

அப்போது உள்ளே நுழைந்தது முதல் நாள் விவாகரத்து அளிக்கப்பட்ட அந்தப் பெண்ணும் அவள் கணவனும்!

''வா! அம்மா! நீ போனில் சொன்னதைக் கேட்டேன். கோர்ட் டிக்ரியை மாற்ற பெட்டிஷன் போடலாம்'' என்றார்.

''ஆமாம் சார் நேற்றுவரை வீம்பாகத் தான் இருந்தேன். நிரந்தரமாக இவரைப் பிரிய வேண்டும் என்றபோது எனக்கு இவர் செய்தது எதுவுமே பெரிய தப்பாகத் தெரியவில்லே! நாங்க நெருங்கி வாழ்ந்த பழைய நாட்கள் என் ஞாபகத்துக்கு வருகின்றன.''

அவள் சொன்னதைக் கேட்ட இவர்கள் காத்திருந்த டாக்ஸியில் பின் சீட்டில் ஏறிப் பக்கத்தில் பக்கத்தில் அமர்ந்தனர்.

''சவிவிங் இங்கே கட்டாயம் வரணுமா?'' என்று கேட்டாள்.

''இந்த சவிவிங் மட்டுமில்லே... என்றைக்குமே வரவேண்டாம்!'' என்றான் அவன்.

டாக்ஸி டிரைவர் தன் முன்னால் இருந்த கண்ணாடியைச் சற்று வேறு கோணத்தில் திருப்பி வைத்தான். அவன் இங்கிதம் தெரிந்தவன். சமயம் அறிந்தவன். உலகம் புரிந்தவன்!



# அரவிந்தர் அரியமொழி





பகுத்தறிவு சாகும்போது ஞானம் பிறக்கிறது.

பகுத்தறிவு ஒவ்வொன்றுக்கும் தனிவிவரம் கொடுத்து, ஒன்றை மற்றவற்றிலிருந்து பாகுபடுத்தி மாறுபடுத்திக் காட்டுகிறது; பிரித்துப் பிரித்துக் காட்டுகிறது. ஞானம் மாறுபாடுகளை நீக்கி அனைத்தையும் ஒன்றாக இசைத்துத் திருமணம் செய்கிறது.

மற்றவர்கள் பகுத்தறிவுப்படி அழுத்தமான காரணங்கள் காட்டிக் கடவுள் இல்லை என்று எனக்கு நிரூபித்தபோது அவர்களை நம்பினேன். பிறகு கடவுளைக் கண்டேன். அவனே வந்தான்; என்னை அணைத்துக் கொண்டான். இப்போது நான் எதை நம்ப? மற்றவரின் பகுத்தறிவு வாதத்தையா, என் சொந்த அநுபவத்தையா?

கடவுள் என்றும் இப்படித்தான் இருக்க வேண்டும், அப்படித்தான் இருக்க வேண்டும், இம்மாதிரி யெல்லாம் இல்லாவிட்டால் அவன் கடவுளே அல்ல என்று தீர்மானித்து விதிக்கிறவர்கள் இருக்கிறார்கள். ஆனால் எனக்கோ கடவுள் வாஸ்தவத்தில் எப்படி இருப்பானோ, அதைத்தான் நான் தெரிந்து கொள்ள முடியும் என்று தோன்றுகிறது. அவன் இப்படித்தான் இருந்தாக வேண்டும் என்று நான் எப்படி அவனுக்குக் கூறுவது என்று எனக்குப் புரியவில்லை. அவனைச்சீர் தூக்கித் தீர்ப்புச் சொல்ல நம்மிடம் ஏது அளவை? இப்படிப்பட்ட தீர்ப்புக்கள் நமது அஹங்காரத்தின் மடமைகளே.

பகுத்துப் பிரிக்கும் பகுத்தறிவு மட்டுமே எனக்கு இருந்தபோது பலவற்றினின்று கூசிச் சுருங்கி விலகினேன். ஞானப் பார்வை பெற்றுப் பகுத்தறிவை இழந்த பின், கூசச் செய்யும் கோரத்தையும் அருவருப்பையும் தேடித் தேடி லோகமெங்கும் அலைந்தேன்; ஆயினும் கண்டேனில்லை.

ஈசன் என் கண்களைத் திறந்து விட்டான். கீழ்த்தரமானதில் உள்ள மேன்மையை, ஒதுங்கச் செய்பவற்றிலுள்ள ஆகர்ஷணத்தை, பின்னமானவற்றிலுள்ள பூர்ணத்தை, கோரத்திலுள்ள அழகைக் காணலானேன்.

ஆண்டவன் மஹா கொடூரமாகச் சித்ரவதை செய்பவனுமாவான் - காரணம், அவன் அன்பு கொண்டிருப்பதே! உங்களுக்கு இது புரியாது. ஏனென்றால் நீங்கள் கண்ணனைக் கண்டதில்லை; அவனோடு விளையாடியதில்லை.

புண்ணியம் எது, பாவம் எது என்பதை மறந்துவிட்டேன். (யாவற்றிலும்) இறைவன் ஒருவனைத்தான் என்னால் பார்க்க முடிகிறது. உலகில் (உலக நடப்புக்களில்) அவன் லீலையையே காண்கிறேன். மனித குலத்தில் (மனித குலம் செய்வதிலெல்லாம்) அவனது ஸங்கல்பத்தையே பார்க்கிறேன்.

நாஸ்திகன் என்பவனும் தன்னிடம் தானே கண்ணாமூச்சியாடிக் கொள்கிற பகவான் தான். ஆஸ்திகன் மட்டும் இதற்கு வேறானவனா என்ன? (கண்ணாமூச்சி முடிந்து கையும் மெய்யுமாய்ப் பிடித்து விட்டவனா என்ன?) இருக்கலாம். ஒருவேளை! இவன் எப்படியும் ஈச்வரனின் நிழலைக் கண்டு அதைப் பிடித்துக்கொண்டவனாச்சே!

துர்ப்பாக்கியமே, நீ வாழி! உன் மூலம் தான் நான் என் காந்தனின் முகத்தைக் கண்டுகொண்டேன்.

ஆண்டவன் எனக்கு நரகத்தில் இடம் நிர்ணயிக்கும் பட்சத்தில் நான் ஏன் ஸ்வர்க்கத்துக்கு அபிலாஷை கொள்ள வேண்டும் என்று தோன்றுகிறது. என் நலனுக்கு ஏற்றது எது என்று அவனே அறிவான்.

என் மனம் அடக்கி வெல்லப்பட்டு விட்டது என்று எப்போது உணர்ந்தேனெனில் எப்போது அது கோரத்திலும் அழகைக் கண்டு ரஸித்ததோ, ஆயினும் பிறர் ஏன் அந்தக் கோரத்திலிருந்து ஒதுங்கி அதை வெறுக்கிறார்கள் என்பதையும் ஸ்வச்சமாக உணர்ந்ததோ அப்போது!

கோரத்திலும் கொடுமையிலும் கூட அழகும் நன்மையுமான ஆண்டவனை உணர்ந்து

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

சிலர் இந்த மூன்று உண்மைகளை வாழ்க்கையில் கண்டு பிடித்து விடுகிறார்கள். அவர்கள் பாக்கியசாலிகள்.

கண்டு பிடிப்பு நம்பர் 1: நம்மில் ஒவ்வொருவரிடமும், குறைவாகவோ அதிகமாகவோ, பிறரை மகிழ வைக்கும் அல்லது வருந்த வைக்கும் சக்தி இருக்கிறது.

கண்டு பிடிப்பு நம்பர் 2: பிறரைக் களிப்படையச் செய்வது, அவர்களைக் கஷ்டப்பட வைப்பதைக் காட்டிலும் லாபகரமானது.

கண்டு பிடிப்பு நம்பர் 3: பிறரை மகிழ்விக்கும் போது நமக்கு மகிழ்ச்சி உண்டாகிறது.

-லாரா ஹக்ஸ்லி

-பிரியா பாலு

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

அவனைப் பிரேமிக்க வேண்டும்; அதேபோதில் கலப்பிலா அன்போடு கோரத்தன்மையும் கொடுமையையும் குறைப்படுத்தவும் தவிப்புடன் முயல வேண்டும். இதுவே புண்ணிய சீலம். இதுவே அற நெறி.

ஒரு புலி தன் இயற்கை தவிர வேறு எதுவும் அறியாமல் செயற்படுவதால் அதனிடம் தீமையின் பாவம் இல்லை. அப்புலியில் தெய்வீகமே நிற்கிறது. தன் நடக்கை பற்றி அதற்கே கேள்வி எழுந்து விட்டால் அதன் பின் அது (தீமையும் பாபமும் பற்றிய) குற்றவாளியாகி விடுகிறது.

வாழ்வு மட்டுமே இருந்து சாவு இல்லாவிடில் அமரத்வம் என்பதே இருக்க முடியாது; அன்பு மாத்திரமிருந்து கொடுமை இன்றேல், ஆனந்தம் என்பது ஆறிப்போன அரை நாழிக் கிளர்ச்சியாகவே இருக்கும்; அறிவு மட்டுமிருந்து, அஞ்ஞானமில்லாதிருந்தால் நம்முடைய மிகப் பெரும் ஸாதனையும் குறுகிய பகுத்தறிவு, உலகியலைப் பற்றி மட்டுமேயான விஷய ஞானம் இவற்றைக் கடந்து சென்றிருக்காது.

உன்னையே நீ நிர்த்தாட்சண்யமாகப் பரீக்ஷித்துக்கொள். பிறரிடம் தயா தாட்சண்யம் நிறைந்தவனாகி விடுவாய்.

கலையெழில் நெறி, ஒழுக்க நெறி இரண்டிலும் வெட்க உணர்ச்சி என்பது அரிய விளைவுகளை ஏற்படுத்தியுள்ளது. அதை நாம் விட்டால் ஊறுதான் உண்டாகும். ஆயினும் வெட்க உணர்வு என்பது (மனித குலத்தின்) பல ஹீனத்துக்கு அடையாளமும், அறியாமைக்கு நிரூபணமும்தான்.

மஹான்கள் அற்புதங்கள் செய்திருக்கின்றனர். அவர்களிலும் பெரிய மஹான்கள் அற்புதங்களைக் கண்டித்துப் பரிஹஸித்துள்ளனர். இவர்கள் யாவரினும் மிகப் பெரிய மஹாபுருஷர்களோ அற்புதங்களைக் கண்டித்துக் கேலியும் செய்துள்ளனர்; தாங்களே அற்புதம் செய்து காட்டியும் இருக்கிறார்கள்.

வேத ஸத்தியத்தை உன் உயிருள் அநுபவமாக்கிக்கொள். அதன் பின் உனக்கு விருப்பமிருந்தால் அவ்வநுபவத்தைப் பகுத்தறிவில் ஆராய்ந்து புத்தி ரீதியில் விளக்கிப் பார். இப்போதும் கூட உன் அறிவு விளக்கத்தில் தான் நீ அவநம்பிக்கை கொள்ளவேண்டுமே யன்றி ஒருபோதும் உன் அநுபவத்தில் நம்பிக்கை இழக்கக் கூடாது.

சமய சிந்தனையில், சமயாநுபவத்தில் சிறுமையை, குறுகலை, உள்ளீடின்மையை விலக்கு. மிக விரிந்த தொடுவானத்தையும் விட விசாலமாயிரு; மிகவுயர்ந்த காஞ்சன சிருங்கத்தைக் காட்டிலும் உயர்வாயிரு; மிகவும் ஆழமான ஆழியை விட ஆழமாயிரு.

(தமிழ் வடிவம்: ரா. கணபதி)

---



கன்னியாகுமரியில் அம்மன் கோயிலின் வெளிப் பிரகார கிழக்கு நடை மூடப்பட்டிருக்கும். ஏன் தெரியுமா? "தொன்றுதொட்டு அம்மனுக்கு ஒளி மிகும் அழகிய மூக்குத்தி அணிந்திருந்தார்கள். அந்த மூக்குத்திக்கு 'நாகமணி' என்று பெயர். அது பல மைல் தூரம் பளிச் சென்று பிரகாசிக்கும் மணி. கிழக்கு நோக்கிய சந்நிதியிலிருந்தும் கிளர்ந்தெழும் அந்த மூக்குத்தியின் ஒளியை ஓர் இரவில் கப்பலில் வந்து கொண்டிருந்த ஒரு போர்த்துகீசிய வியாபாரி பார்த்தான். ஒளி வரும் திசை நோக்கித் தன் கப்பலைச் செலுத்தினான். இடையிலே அலைகளின் வேகத்தால் பாறையில் மோதி கப்பல் கவிழ்ந்து போய் விட்டது. வியாபாரி நீந்திக் கரை சேர்ந்தான். கோயிலின் கிழக்கு வாயிலைத் தாண்டிச் சென்று அம்மனின் மூக்குத்தியைத் திருடிச் சென்று விட்டான். திருடியவன் அங்கு இருப்பானா? அயல் நாட்டுக்குப் போய் 'ஆம்ஸ்டர்டாம்' நகரில் அதை விற்று விட்டான். பிரஞ்சு வியாபாரி 'ஆர்லாப்' என்பவன் நாகமணியை வாங்கிப் பின்னர் ரஷ்ய சக்கரவர்த்தினி காதரீனுக்கு விற்றான். ரஷ்ய சக்கரவர்த்தினி அதற்கு 600 மிலியன் பவுண்டு வழங்கினார். அதற்குப் பிறகு அந்தப் பரம்பரையில் வந்த ரஷ்ய சக்கரவர்த்தி தம் கிரீடத்தில் அந்த மூக்குத்தியை வன்னமாகப் பதித்துக் கொண்டார். இன்றும் அந்த மூக்குத்தி ரஷ்ய சக்கரவர்த்தி அணிந்திருந்த கிரீடத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

இலங்கையும் குமரியும் பிரிவில்லாமல் இணைந்திருந்த முந்காலத்தில் குமரிப்பகுதியில் 'மேரு மலை' என்ற வைரச் சுரங்கம் இருந்தது. அந்தச் சுரங்கத்தில் தான் நாகமணி கிடைத்தது. அந்தக் காலத்தில் குமரியை ஆண்ட 'முந்தலம் நிலந்தரு திருவிற் பாண்டியன்' என்ற பாண்டிய மன்னன்தான் நாகமணி மூக்குத்தியைக் குமரி அம்மனுக்கு அணிவித்தான். அப்படி அணிவிக்கப்பெற்ற அந்த நாகமணிதான், வரலாற்று அலைகளில் மாறிக் மாறி கடைசியில் ரஷ்ய சக்கரவர்த்தி அணிந்திருந்த கிரீடத்தில் ஆர்லாப் டைமண்ட் என்ற பெயரில் விளங்குகிறது!

முதலில் சொன்ன போர்த்துகீசிய வியாபாரி கிழக்கு வாயில் வழியாக வந்து மூக்குத்தியைக் கவர்ந்து விட்டதால், அந்தப் பகுதியில் வாழ்ந்த மக்கள், அம்மன் கோயிலின் கிழக்கு நடையை மூடி விட்டார்கள். அதனால்தான் நிரந்தரமாக இன்றும் கிழக்கு நடை மூடப்பட்டிருக்கிறது.

— வி.எஸ். மகாதேவன்

# சட்ட மன்றத்தில் புது முகங்கள்

மக்கள் ஆட்டு மந்தை போல் நடந்து கொள்வது ஜனநாயகம் அல்ல. ஜனநாயகத்தில் தனிமனிதனின் அபிப்பிராய சுதந்திரத்தையும் செயல் சுதந்திரத்தையும் விட்டுக் கொடாமல் கவனத்துடன் பாதுகாக்க வேண்டும். எனவே, பெரும்பான்மையினரிடமிருந்து மாறுபட்டு நடந்து கொள்ள சிறுபான்மையினருக்குப் பூரண உரிமை உண்டு என்று நான் நம்புகிறேன்.

—காந்திஜி



**அ. சாகுல் அமீது**

முஸ்லிம் லீக், பாளையங்கோட்டை, நெல்லை மாவட்டம்.

மறைந்த காயிதே மில்லத்தின் மனைவியாருடைய அக்கா மகன். அவரையே அரசியல் வழிகாட்டியாகப் போற்றுகிறார்.

"என் தொகுதியில் நெசவாளர்கள் அதிகம். அவர்கள் நலனுக்கு உழைப்பதுடன் சாலைகளும், குடிநீர் வசதியும் செய்து தரவும் முயலப் போகிறேன்" என்கிறார்.

பொழுது போக்கு கவிதைகள் எழுதுவது. "பொதுகை அமீது" என்ற புனை பெயரில் பல கவிதைகள் பிரசுரமாகியுள்ளன. லீக்கின் தமிழ்நாடு இளைஞர் அணித் தலைவர்.



**எம். சுப்பிரமணியன்**

அ.இ.அ.தி.மு.க. திருவையாறு (தஞ்சை மா. வ.)

வயது இருபத்தொன்பது. எம்.ஏ. பட்டதாரி. திருமணம் ஆகவில்லை. அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் எம். ஏ. படித்தவர். விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர். "அறிஞர் அண்ணா, தந்தை பெரியார் ஆகியோரின் உயிரோட்டமுள்ள கருத்துக்களால் ஈர்க்கப்பட்டு அரசியலுக்கு வந்தேன். புரட்சித் தலைவர் என் வழிகாட்டி" என்கிறார்.

"என் தொகுதியில் ஏழை எளிய அரிசன மக்களின் வாழ்க்கைத் தரம் உயரவும், விவசாயிகளின் பிரச்னைகள் தீரவும் பாடு படுவேன்" என்று அழுத்தமாகச் சொல்கிறார். இவர் வெற்றிபெற்ற சமயம் அரசியல் காழ்ப்பு உணர்ச்சிகள் காரணமாய் இவரது சகோதரர் எம். உலகநாதன் கொல்லப்பட்டார்.



**கு. பா. பழனியப்பன்**

தி.மு.க. விழுப்புரம் (தென் ஆர்க்காடு மாவட்டம்)

பத்து ஆண்டுகளாக வழக்கறிஞராகப் பணியாற்றி வரும் இவர், இதற்கு முன் ஆசிரியராகவும், கூட்டுறவுத் துறை அலுவலராகவும் பணி புரிந்திருக்கிறார்.

தேர்தல் வேலைகளில் கல்லூரி மாணவராயிருந்த போதே ஈடுபட்டதுண்டு. மாணவர் தி. மு. கழகத்தில் செயல்வீரராக விளங்கியவர்.

"பெண்ணையாற்றுக்கு வடபுறம் கரையமைக்கவும், தொழில் துறையில் பின் தங்கிய பகுதியான எங்கள் தொகுதியில் தொழிற் பேட்டை அமைக்கவும் பாடு படுவேன்" என்கிறார்.

மாலை நேரம் ஓய்வு இருப்பின் நாடகம் பார்க்க நடப்பாராம்.



**க. நாராயணசாமி ரெட்டியார்**

இந்திரா காங்கிரஸ், திருவண்ணாமலை

முதிய அரசியல்வாதியான இந்த அறுபது வயதுக்காரர், நாற்பது ஆண்டுகளாகக் காங்கிரசில் பணியாற்றி வருபவர். குடும்பத் தொழில் விவசாயம் என்றாலும், சொந்தமாக பஸ் வைத்துக் கொண்டு தாமே ஓட்டவும் செய்கிறார். இப்பெண்ணத்தூர் பஞ்சாயத்து உறுப்பினராக ஐந்து ஆண்டுகள் இருந்தவர்.

"என் தொகுதியில் பலருக்கு வீடுகள் இல்லை. இதனால் ஏழைகளுக்கு வீட்டு மனைப் பட்டா வழங்கவும், விளக்குகளே இல்லாத பல பகுதிகளுக்கு விளக்குப் போடவும் அரசிடம் கேட்கப் போகிறேன்" என்று கூறும் இவர், தமது பகுதியில் பலர் ஒத்துழைப்புடன் கல்யாண மண்டபம், பள்ளி ஆகியன கட்டியுள்ளார்.

பேட்டி: சிக்கி

(சென்ற இதழ் தொடர்ச்சி)

கேள்வி: கிராமப் பொருளாதார வளர்ச்சிக்குச் சிறு தொழில்கள் உதவ முடியும் என்பதற்கு எதை எடுத்துக்காட்டாகக் கூறுவீர்கள்? இதை அமல்படுத்துவதில் தடைகள் பிரச்னைகள் ஏதும் உண்டா?

பதில்: சின்ன விஷயம். தீப்பெட்டியை எடுத்துக் கொள்ளுங்கள். பெர்னாண்டஸ் ரொம்ப நல்ல காரியம் செய்தார். பெரிய தொழிலகங்களிலிருந்து தீப்பெட்டி தயாரிக்கும் உரிமையை நீக்கிக் குடிசைத் தொழிலுக்கு உதவினார். அதில் உறுதியாக இருந்தார். இதனால் எத்தனை பேருக்கு வேலை தர முடிந்தது. தாய்மார்களுக்கு நாங்கள் ஒரு மாதப் பயிற்சி அளித்தோம். சுமார் 25000 முதல் 30000 தாய்மார்களுக்கு வேலைதர முடிந்தது. அவர்கள் வீட்டிலிருந்தபடியே சம்பாதிக்கிறார்கள். அதுபோல் எத்தனையோ பல சிறு தொழில்களைத் தொடங்க முடியும். ஆனால் இவற்றுக்கும்கூட கட்டுப்பாடுகள் சட்ட திட்டங்கள் என்று வந்தால் என்ன செய்வது? இன்னின்ன இனங்களில் இன்னார்தான் தொழில் நடத்தலாம் என்று கட்டுப்பாடுகளைக் கொணர்ந்தால் பெரும்பாலும் வசதியுள்ளவர்கள்தான் தொழில் நடத்த முடியும். யந்திரங்களால் நிறைவேறும் தொழில்களை நம்பினால் அவற்றைப் பணக்காரர்கள்தான் தொடங்க முடியும்.

ஒரு பக்கம் பணக்காரர்கள் மேன்மேலும் தொழில்கள் தொடங்கி மேலும் பணக்காரர்களாவதாகக் குறைப்படுகிறார்கள். மற்றொரு புறம் சாமானியர் தொழில் செய்ய வசதிகள் இல்லை; அனுமதியில்லை. கிராமம் நகரம் இரண்டும் வளர்ச்சியுறும் கலப்புப் பொருளாதாரத்தை வரவேற்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால் நடப்பதில்லை. இதற்கு அடிப்படைக் காரணம் என்ன? வெளிப்படையாகப் பேசப்படாத காரணம் ஒன்று உண்டு.

ஆட்சிக்கு வர சிலரது தயவு வேண்டும் என்ற நிலை ஏற்படுமானால் பிறகு நன்றி உணர்வு காரணமாக அவர்களைத் திருப்திப்படுத்த ஆட்சிக்கு வந்தவர்கள் சில காரியங்களைச் செய்ய வேண்டியதாகிறது. அது நாட்டுக்குப் பாதகமாகிறது. ஆட்சியில் இருப்பவர் பணக்காரர்களைப் பகைத்துக் கொள்ள

# முதல்வர்
## பேட்டி



## திகைப்பு!

ஆதி சங்கரர் தம் சீடர்களுடன் ஒரு ஊருக்கு விஜயம் செய்தார். ஒரு கள்ளுக் கடை முதலாளி தெருவில் நடந்து வந்த சங்கரரை உபசரித்து ஒரு குவளையில் கள்ளினை அளித்தான். மறுக்காமல் சங்கரர் அதைப் பருகினார். அதைக் கண்ட சீடர்களும் அவ்வாறே செய்தனர்.



சங்கரர் அடுத்த வீதியில் நடந்து சென்றார். அங்கே ஒரு கொல்லனின் உலைக்களம் இருந்தது. சங்கரர் அதனுள் நுழைந்தார். அங்கே அடுப்பில், வைக்கப்பட்டிருந்த பெரிய வாணலியில் இரும்பு, குழம்பாகிக் கொதித்துக் கொண்டிருந்தது.

சங்கரர் மெள்ள, அருகில் இருந்த கோப்பையை எடுத்துக் கொதிக்கும் இரும்பைக் குடித்து விட்டு வெளியேறினார்.

சீடர்கள் திகைத்து நின்றனர்.

இராம. குமாரசாமி

முடிவதில்லை. ஏழைகளுக்கு எப்படி உதவ முடியும்?

ஒரு பெரிய தொழிலதிபரை எடுத்துக் கொண்டால் அவருக்கே இன்று நாடாளு மன்றத்தில் சில உறுப்பினர்கள் இருக்கிறார்கள். இந்த ஆட்சி போய் எதிர்க் கட்சி ஆட்சிக்கு வருமானால் அப்போதும் இவர்களுடைய செல்வாக்கு அங்கு இருக்கிறது. ''நம்முடைய எம். எல். ஏக்கள் இருக்காங்க எம்.பி.க்கள் இருக்காங்க, பேசச் சொல்லலாம், கவனிக்கச் சொல்லலாம்'' என்று கூறுகிற தொழிலதிபர்கள் உண்டு.

அ. தி. மு. க. முதன் முதலில் தேர்தலில் போட்டியிட்டபோது கட்சிக்குப் பண வசதி இல்லை. ஓரளவு வசதி படைத்தவர்களை வேட்பாளர்களாக நிறுத்தலாம் என்று நினைத்தோம். ஆட்களைத் தேடிக் கொண்டிருந்தோம். இதற்குள் நாங்கள் சற்றும் எதிர் பாராத விதமாக நாலைந்து தினங்களுக்குள் இரண்டரைக் கோடி டெபாசிட் பணம் வந்தது. 'இவ்வளவு வசதி உள்ளவரா அ.தி.மு.க. தொண்டர்கள்?' என்றால், இல்லை. கண்ணுக்குத் தெரிந்தவர்களை முன் வைத்துப் பின்னணியில் தொழிலதிபர்கள் இருந்து பணம் கட்டியிருக்கிறார்கள், ஒவ்வொருவருக்கும் 25,000 30,000 என்று. திருப்பி அனுப்பிவிட்டோம்.

பண வசதியினால் தேர்தலில் வெற்றி பெறலாம் என்ற நிலைமையை மாற்ற வேண்டும். அப்போதுதான் மத்தியிலும் சரி, மாநிலத்திலும் சரி ஆட்சிக்கு வருபவர் பணக்காரருக்கு நன்றிக் கடன் பட்டிருக்க மாட்டார். அப்போதுதான் ஏழைகளுக்குத் தயக்கமின்றி உதவ முடியும். உண்மை ஜனநாயகம் நிலைக்கும்.

கேள்வி: தேர்தல் முறை மாறவேண்டும் என்கிறீர்களா? எந்த விதத்தில் மாற வேண்டும்?

பதில்: அரசே போஸ்டர்களைத் தயாரிக்கலாம். 15 அல்லது 20 அடிக்கு மேல் வாக்குச் சாவடிக்கு நடக்க அவசியம் இல்லாமல் செய்யலாம். வாக்கு அளிக்காதவர் மீது நடவடிக்கை எடுக்கலாம். எனக்குத் தெரிந்து ஒரு தொகுதி மக்களில் சிலர் ''எங்களை யாருமே கவனிக்கவில்லை. நாங்கள் யாருக்கும் வோட்டுப் போட மாட்டோம்'' என்றார்கள். நான் கேட்டேன். 'வோட்டுப் போடாததால் உங்களைஅலட்சியப்படுத்துவது அதிகமாகுமே தவிர எப்படிக் குறையும்? நீங்கள் யாரைத் தட்டிக் கேட்பீர்கள்? யாருக்கு நஷ்டம்?'' என்றேன். புரிந்து கொண்டார்கள். எல்லோரையும் வோட்டுப் போடுமாறு கட்டாயப்படுத்த முடியாது என்றால் சிறுபான்மையினரின் வோட்டுப் பெற்றுப் பெரும்பான்மை பலத்துடன் ஆட்சிக்கு வரும் நிலைமை மாற, விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை வரவேண்டும். இதை யெல்லாம் கவனியாமல் வயது வந்தோருக்கு எல்லாம் வாக்குரிமை வழங்கியது சரியாகாது. தவிர பொறுப்பில்லாமல் நடந்து கொள்ளும் பிரதிநிதியைத் திரும்ப அழைக்கும் உரிமை மக்களுக்கு வேண்டும். வேறு பல நாடுகளில் இந்த உரிமை இருக்கிறது. அவற்றை ஆலோசித்து, திட்டம் வகுத்து இங்கும் மக்களுக்கு அந்த உரிமையை வழங்க வேண்டும்.

ஜாதி உணர்வை வைத்து வோட்டுப் பெறும் பழக்கம் ஒழிய வேண்டும். வசதியாக வாழ்பவர்களைத் தாழ்வுறச் செய்வது அல்ல நல்லாட்சி. வசதி இல்லாதவனுக்கு வசதி ஏற்படுத்தித் தருவதுதான் நல்லாட்சி. ''இருக்கிறவனை வாழவிடு; வாழ வழி இல்லாதவனுக்கு வாழ வழி ஏற்படுத்து'' என்பது அண்ணாவின் கருத்து. தாழ்த்தப்பட்டவர்களுக்கு உதவுவதாகக் கூறிக் கொண்டு மற்றவர்களுக்கு அவர்கள் மீது எரிச்சலும் ஆத்திரமும் உண்டாகும் அளவுக்குப் போகக் கூடாது. அது உதவியாகாது. பொருளாதார ரீதியில் தாழ்த்தப்பட்ட நிலையில் இருப்பவரிடம் குலம் ஜாதி என்றெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கவும் முடியாது.

ஒரு நாள் எங்கள் கட்சியில் சேர வந்த சிலருடன் பேசிக் கொண்டிருந்தேன். ஒரு அம்மாள் ''சித்தாள் வேலை செய்கிறேன். இருக்க ஒரு கூரை கூட இல்லாமல் தவிக்கிறேன். குழந்தைங்க இருக்காங்க, கணவனுக்கு வேலை செய்ய முடியவில்லை. உடம்பு சரியில்லை'' என்று கூறினார்கள். ''அம்மா நான் கேட்கக் கூடாது; ஆனால் உங்க முகத்

தைப் பார்த்தாக் கேட்கத் தோணுது. நீங்க என்ன ஜாதி?'' என்றேன். ''பிராமணன்'' என்றார்கள். இப்படிப்பட்டவர்களை எந்த ஜாதியில் சேர்ப்பது? எத்தனையோ பேர் உயர் ஜாதி என்று கருதப்படுகிறவர்கள் பரம ஏழைகளாக இருக்கிறார்கள். இங்கே ஜாதிப் பிரச்னை எங்கே வந்தது?

தாழ்த்தப்பட்டவர் நிலையை உயர்த்த வேண் டும் என்று சொல்கிறோம், சரிதான். அவர்கள் தகுதியை உயர்த்தப் போகிறோமா, எண் ணிக்கை அடிப்படையிலா என்பது அடுத்த கேள்வி. எண்ணிக்கை அடிப்படையில் அவர் களை முதலில் உயர்த்துகிறோம்; இனி தகுதி அடிப்படையிலும் அவர்களை உயர்த்த வேண் டும். இதுதான் அண்ணா கொள்கை. இன்று தாழ்த்தப்பட்டவர்கள் என்று கருதப்படுகிற வர்கள் தானே 'எங்களுக்கு இந்தச் சலுகை வேண்டாம்' என்று கூறுமளவுக்கு அவர்கள் தகுதியை நாம் உயர்த்த வேண்டும்.

கேள்வி: தொழில் துறையில் தமிழகம் பின்தங்கி விட்டதாக ஆர். வி. தேர்தல் பிரசாரத்தின்போது கூறினாரே?

பதில்: நாங்கள் முயற்சி செய்யாமலா? எத்தனை தொழில்களுக்கு நாங்கள் மத்திய அரசுக்குச் சிபாரிசு செய்திருக்கிறோம், என்ன பதில்கள் வந்துள்ளன என்று ஆராய்ந்தால் போதும்; நிலைமை புரியும். இதற்காகத் தான் மாநிலங்களுக்கு அதிக உரிமைகள் தேவை. நமது தேவைகளை நாம் உணர்வது போல் மத்தியில் உணர முடி யாது. எனவே இவ்விஷயங்களை நாமே நிர் ணயித்துக் கொள்ள அதிகாரங்கள் வேண்டும் என்பது.

[இச்சமயத்தில் இண்டர்காம் ஒலிக்கிறது. இன்னும் ரொம்பப் பேர் முதல்வரைக் காணக் காத்திருப்பது புரிகிறது. ''இந்தத் தடவை இவ்வளவு போதும்; அடுத்த பேட்டி யின்போது இன்னும் விரிவாகப் பேச எனக்கு அனுமதி கொடுங்கள்'' என்று வேடிக் கையாகக் கூறி விடை கொடுத்து அனுப்பு கிறார் முதல்வர்.]

பேட்டி: **கே. எஸ். ராமானுஜம்**

## அந்த நாள் டைவோர்ஸ்!

அந்த நாளைய ரோமாபுரி சாம்ராஜ்யத்தில் ஆட்சி புரியும் மன்னனிடம் விசுவாசம் வைக்க வேண்டியது கடமையாகக் கருதப்பட்டது.

ஒரு கணவனோ மனைவியோ ஆட்சிக்கு எதிராகச் சதி செய்ததாக நிரூபிக்கப்பட்டால், மற்றவர், சுலபமாக விவாகரத்துப் பெற்று விடலாம்.

• • •



ஆஸ்திரேலிய நாட்டுப் பழங்குடி மக்களி டையில் இப்படி ஒரு வழக்கம்: விவாகரத்து செய்யப்பட வேண்டிய பெண்ணை ஒரு மரத்தடி யில் நிறுத்தி மற்றவர்களெல்லாம் வேடிக்கை பார்ப்பார்கள். நாற்பதடி தூரத்தில் விவாகரத் துக் கோரும் கணவன் கையில் பத்து ஈட்டிகளு டன் நிற்பான். ஒவ்வொரு ஈட்டியாகக் குறிபார்த்து அந்தப் பெண்ணை நோக்கி வீசுவான். அவள் ஓடாமல் நெளிந்து வளைந்து தாக்குதலிலிருந்து தப்பிக்க வேண்டும். அவள் அந்தப் பத்து ஈட்டி வீச்சிலிருந்தும் தப்பி விட்டால் அவளுக்கு விவாக ரத்து அளிக்கப்படும். தப்ப முடியா விட்டால் சாக வேண்டும்!

• • •

மத்திய ஆப்பிரிக்காவைச் சேர்ந்த ஒரு பழங் குடி இனத்தில் விவாகரத்து விவகாரம் வெகு சுலபமாகத் தீர்க்கப்படுகிறது. வேண்டாத மனைவி யைக் கணவன் குடிசையிலிருந்து அலாக்காகத் தூக்கிக் கொண்டு போய்க் குடிசை முன் இருக்கும் பொட்டல் வெளியில் போட்டு விடுவான். அவ் வளவுதான்! விவாகரத்து அமுலுக்கு வந்து விட்டதாக அர்த்தம்.

• • •

சிவப்பு இந்தியர்களிடையே திருமணத்தின் போது கணவன் மனைவியருக்குச் சிறு குச்சிகளைக் கயிற்றால் கட்டிப் பத்திரமாக வைத்திருக்கும்படி கொடுக்கப்படும். கணவன் விவாகரத்தை விரும் பினால், அந்தக் குச்சியை உடைத்துப் போட்டு விடுவான். திருமணமும் உடைந்ததாகப் பொருள்.

– மேனு





''அழுணுமா, எதற்கு?''

பெண் பலவந்தமாக அழ முயன்ருள். அழுகைக்குப் பதில் ஓர் அசுரச் சிரிப்பு பீறிக்கொண்டு வந்தது. அதன் பயங்கரம் ராயரின் இரத்தத்தை உறைய வைத்தது.

'இங்கே வாங்க. குழந்தை ஏன் இப்படித் தவியாய்த் தவிக்கிருள்? டாக்டருக்குப் 'போன்' பண்ணட்டுமா?''

ராயர் பெண்ணருகில் வந்தார். அவரைக் கண்டவுடன் பெண்ணின் முகம் மேலும் விகாரமாயிற்று. ''அ...ப்...பா...வை.... அந்தப் பக்கம் போகச் சொல்'' என்று இக்கித் திக்கிப் பேசிஞள்.

''உனக்கு என்னம்மா செய்கிறது?'' என்று கேட்டார் ராயர் கவலையுடன்.

# மகிழ்ந்தது போதும்!

ஜி.எஸ்.பாலகிருஷ்ணன்

**வா**சலில் டாக்சி வந்து நின்றது.

அனு இறங்கிஞள். பின்னல் மாப்பிள்ளை இறங்குவார் என்று எதிர்பார்த்தார் கிருஷ்ண ராவ். ஆனல் யாரும் இறங்கவில்லை.

'இவள் ஏன் தனியே வந்திருக்கிருள்? தந்தி கூட அடிக்கவில்லையே' என்று குழம்பி நின்ருர் ராவ்.

அனு அவரைத் தாண்டி வீட்டுக்குள் சென்ருள். ஒன்றும் பேசவில்லை. இது விசித்திரமாகப் பட்டது ராயருக்கு. 'அப்பா' அப்பா' என்று சதா பிராணனை விடும் பெண்ணுக்குத் திடீரென்று என்ன நேர்ந்து விட்டது?

அவள் முகம் வழக்கம் போல் இல்லை. பூசிஞற்போல் இருந்தது. தன்னுடைய மனப் பிரமையா, இல்லை, பிரயாணக் களைப்பா?

சமையலறைக்குச் சென்ருள் பெண். ராயர் பொறுத்திருந்து கவனித்தார். அம்மாவைக் கண்டவுடன் உணர்ச்சி வசப்பட்டு உரக்கப் பேசுவாளே இன்று ஏன் இந்த மௌனம்?

ராயரின் மனைவி யமுனதான் பேசிஞள். 'ஏண்டி திடீரென்று? கடுதாசி போடக் கூடாதா? ரயிலடிக்கு வந்திருப்போமே'.

பெண் பதிலேதும் சொல்லவில்லை.

''ஏன் மூஞ்சி யெல்லாம் வாடி யிருக்கு? உடம்புக்கு ஒன்னுமில்லையே? மாப்பிள்ளை எங்கே?... அவரிடம் சண்டை கிண்டை போட்டுண்டு வந்திருக்கிருயா?''

''அதெல்லாம் இல்லே அம்மா. கொஞ்சம் பொறு. விவரமாகச் சொல்கிறேன்.''

''ஏண்டி மூஞ்சி இப்படிக் கோணிக் கோணி இழுக்கிறது? உடம்புக்கு என்னடி குழந்தே!''

''அழணும் அம்மா. ஆனல் முடியலே.''

''எல்லாம.... உங்களால்தான்... அப்பா உங்க ஆராய்ச்சி ... ஆராய்ச்சி....'' என்று அவள் பேசி முடிப்பதற்குள் அந்தப் பாழாய்ப் போன சிரிப்பு பீறிக் கொண்டு வந்தது. புரையேறும் அளவுக்கு அது வளர்ந்து விசுவரூபம் எடுத்தது.

ராயர் மேல் துண்டால் வாயைப் பொத்திக் கொண்டு பக்கத்து அறைக்குச் சென்ருர். அங்கே அவரது கண்டுபிடிப்பான 'தீவிர மகிழ்ச்சி மாத்திரைகள்' சிதறிக் கிடந்தன. அத்தனை வில்லைகளையும் ஒரே அள்ளாக அள்ளி ஜன்னல் வழியாக விட்டெறிந்தார். ரேடியோ அலறிக் கொண்டிருந்தது. ஆனல் ராயர் செவிகளில் ஒரு பிரபல அமெரிக்க மருத்துவரின் சிம்மக் குரல்தான் ஒலித்தது. வழக்கத்துக்கு மாருக நாராசமாக ஒலித்தது: 'ராயர் ஒரு மேதை. அவர் அதிசயக் கண்டு பிடிப்பான 'மகிழ்ச்சி வில்லைகள்' மார்க்கெட்டிலிருக்கும் மற்ற Anti Depressant வில்லைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டவை. இவை செய்யப்படும் முறையே தனி. தீவிரத்துக்குப் பெயர் போன இந்த மாத்திரைகள் மருத்துவ வட்டாரத்தில் சர்ச்சைகளைக் கிளப்பி விட்டிருப்பதென்னவோ உண்மை. ஆனல் விஞ்ஞான வளர்ச்சியில் இந்த மகத்தான கண்டுபிடிப்பு குறிப்பிட வேண்டிய ஒரு மைல் கல்....'

● ● ●

"**டா**க்டர் ராவ்''

''யார், புரொபசர் கோதண்டமா?''

''நானேதான்.''

''எங்கே இந்தக் கொட்டு மழையில்?''

''ஒன்றுமில்லை. சாயங்காலம் நீர் சொன்ன விஷயம் என்னைக் குழப்பிவிட்டது.''

''எதைச் சொல்கிறீர்?''

''புதிதாக நீங்கள் தொடங்கியிருக்கும் மகிழ்ச்சி வில்லை ஆராய்ச்சியை!''

''புரட்சிகரமானது. வெற்றி பெற்றால் மனித ஜாதிக்கு வரப்பிரசாதம்.''

''இல்லை, அது மனித இனத்துக்குப் பெரும் தீங்கு விளைவிக்கும்.''

''என்ன உளறுகிறீர்?''

''நீர் இயற்கைக்கு எதிராகச் செயல் புரியத் திட்டம் போட்டிருக்கிறீர். அது தோல்வியில்தான் முடியும். இயற்கையுடன் ஒன்றிப்போய், அதன் புதிர்களை விடுவிப்பது தான் விஞ்ஞானத்தின் இலட்சியம்!''

''அப்படி எந்த மடையன் சொன்னான்? இயற்கையை மாற்றுவதும், அதன் போக்கைத் திருத்துவதும், ஏன் இயற்கையை வெல்லுவதும் கூட விஞ்ஞானத்தின் நோக்கங்கள்தாம். பருவம் கடந்த பின் செயற்கை மழை பொழிய வைப்பது எதைச் சேர்ந்தது? கழுதையையும் குதிரையையும் கூட வைத்துக் கோவேறு கழுதையை உருவாக்குவதில் விஞ்ஞானி வெற்றி பெறவில்லையா?''

''ஆஹா, எத்தனை பெரிய சாதனை! வம்ச விருத்தி பண்ண முடியாத ஒரு 'நபும்சக ஜீவி'யைப் படைத்ததுதான் விஞ்ஞானத்தின் மகத்தான சாதனையா? அதனால் யாருக்கு என்ன இலாபம்?''

''மலைப் பிரதேசங்களில் மூட்டை தூக்க உதவும் பிராணி எது? பயனை விட்டுத் தள்ளுங்கள். அப்படி ஒரு ஜீவியை இயற்கையுடன் போட்டி போட்டுக் கொண்டு சிருஷ்டிக்க முடியும் என்று நிரூபித்ததே பெரிய சாதனையல்லவா?''

ராயரின் ஆராய்ச்சி தொடர்ந்தது. பலர் தடுத்தும் நிறுத்தவில்லை. இரவு பகல் ஆராய்ச்சி செய்தார். நாள் கணக்கில் வீட்டுக்கே போகவில்லை. தாடி காடாக வளர்ந்தது!

● ● ●





**ம**னித வாழ்க்கைக்கு இன்பமும் துன்பமும் மாறி மாறி வருகிறதல்லவா? துன்பத்தைக் குழி தோண்டிப் புதைத்து, மனிதனைச் சதா மகிழ்ச்சிக் கடலில் திக்குளிக்க வைப்பதுதான் மகிழ்ச்சி வில்லையின் நோக்கம்.

ஆராய்ச்சியை எதிர்த்தவர்கள் கூற்று வருமாறு: இன்பம், துன்பம் என்று தீர்க்க தரிசனத்துடன்தான் படைத்திருக்கிறார் கடவுள். அந்தப் பேரறிவின் செயல்களில் குற்றம் கண்டுபிடிக்க முயல்வது மதியீனம். இயற்கையின் 'மெக்கானிஸம்' அப்பழுக்கற்ற ஒன்று. அதைத் திரிசமன் செய்தால் துன்பமும் குழப்பமும்தான் விளையும்.

மகிழ்ச்சி வில்லையை விஞ்ஞான உலகம் கொட்டு மேளத்துடன் வரவேற்றது. ராயரின் புகழ் வெகு விரைவில் கொடி கட்டிப் பறந்தது. விருதுகள் அவரைத் தேடி வந்தன. பணம் மழையாய்க் கொட்டிற்று. எத்தனையோ பெரிய பெரிய கம்பெனிகள் அவரது 'பேடண்ட்' கண்டுபிடிப்பை வியாபார ரீதியில் விற்க முன்வந்ததுடன் பெரிய பெரிய தொகைகளை முன் பணமாகத் தந்தன. ஏகப்பட்ட விளம்பரம்.

யாருக்குத்தான் அழுமூஞ்சி வாழ்க்கை வாழப் பிடிக்கும்? எல்லோரும் விழுந்தடித்துக் கொண்டு மகிழ்ச்சி வில்லை வாங்கத் தொடங்கினார்கள். சினிமா நட்சத்திரங்கள் என்ன மாணவர்கள் என்ன வில்லை பிரமாதமாக விற்கத் தொடங்கியது விலை விஷமாக ஏறிற்று. விரைவிலே அதற்குக் கறுப்பு மார்க்கெட் வேறு தோன்றியது!

ராயர் பெரும் பணக்காரரானார். அவர் வீட்டு வாசலில் 'பென்ஸ்' கார் ஒன்று கம்பீரமாக நின்றது. அவரைப் பேட்டி காண வேண்டுமென்றால் காரியதரிசிகள் மூலமாகத்தான் போக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது.

அப்பொழுதுதான் சில டாக்டர்கள் விழித்துக் கொண்டார்கள். மகிழ்ச்சி வில்லைகளைத் தங்கள் மேற்பார்வையில் குறிப்பிட்ட நோயாளிகளுக்கு மட்டும் தரலாம் என்று அவர்கள் பத்திரிகைக்கு எழுதினார்கள். மற்றவர்கள் கண்மூடித்தனமாய் உட்கொள்வதினால் ஏற்படக்கூடிய தீமைகளைச் சுட்டிக் காட்டினார்கள். சட்டம் குறுக்கிடுவதற்குள் காலம் கடந்து விட்டது. பலர் மகிழ்ச்சி வில்லைக்கு நிரந்தர அடிமைகளாக மாறியிருந்தார்கள். கல்லூரி ஹாஸ்டல்களில் மகிழ்ச்சி வில்லையைத் தின்று கவலைகளைத் தாற்காலிகமாக மறக்கும் 'நோய்' பெருமளவில் பரவியிருந்தது. சமூகத் துரோகிகள், சின்னஞ் சிறிசுகளுக்கெல்லாம் ரகசியமாக வில்லைகளை விற்கத் தொடங்கினார்கள். ஒரு சில இல்லாடிகள் போலி வில்லைகளைத் தயாரிக்கவும் தயங்கவில்லை.

'மகிழ்ச்சி வில்லை நோய்' ஓர் உலகப் பிரச்னையாயிற்று. வைத்தியப் பத்திரிகைகளிலெல்லாம் அதைப் பற்றிய சர்ச்சைதான்! அது மனிதனது மன ஆரோக்கியத்தை எப்படியெல்லாம் பாதிக்கும் என்பதைப் பற்றிக் காரசாரமான கட்டுரைகள் வெளிவந்தன. மகிழ்ச்சி வில்லையினால் கெடுதல் எதுவும் இல்லை என்று வாதாடிய சிறுபான்மைக் கட்சியின் குரல் அதிகமாக எடுபடவில்லை.

• • •

**"அ**னு, ஏம்மா இப்படித் தவிக்கிறே?"

"அழணும் அம்மா, அழுது தீர்க்கணும். ஆனால் சிரிப்புத்தான் பீறிட்டுக் கொண்டு வருகிறது; பயங்கரமான சிரிப்பு. எல்லாம் அப்பாவின் வில்லையை அதிகப்படியாக உட்கொண்டதன் வினை."

"என்ன சொல்கிறாய் நீ?"

'கல்யாணம் ஆகிப் புக்ககம் போகும் போது அப்பாவின் மகிழ்ச்சி வில்லைகள் சிலவற்றை ரகசியமாக எடுத்துச் சென்றேன். துன்பம் ஏற்பட்டபோதெல்லாம் அவற்றை உட்கொண்டேன். மாமியார் ஏறுமாறாக நடந்தபோதும், நாத்திகள் தூற்றிய போதும் நான் இடிந்து போய் உட்கார்ந்து விடவில்லை. மிட்டாயைச் சுவைப்பதுபோல் மகிழ்ச்சி வில்லைகளைச் சுவைத்தேன். நாளடைவில் காப்பிகுடிப்பது போல் அது ஒரு 'தேவை' யாகிவிட்டது. ஒரு வில்லையில் போதிய 'கிக்' கிடைக்கவில்லை. ஒன்று ரெண்டு... எட்டு என்று எண்ணிக்கை ஏறிக் கொண்டே போயிற்று. அவை இல்லையென்றால் வாழ்க்

# அறுவை சிகிச்சை இன்றி மூலத்தை சுருக்குவீர் நமைச்சலையும் வலியையும் அபூர்வ மருந்தால் விரட்டுவீர்

நியூயார்க்—மருத்துவ விஞ்ஞானத் துறை இப்போது பெருமளவில் மூலநோயை அறுவை சிகிச்சை இன்றி சுருக்கும் ஒரு மருந்தைக் கண்டுபிடித்துள்ளது. மூலநோயால் ஏற்படும் வலியும் நமைச்சலும் நீங்கி, அதிவிரைவில் மூலம் சுருங்கி குண மேற்பட்டிருப்பதை டாக்டர்களின் பரிசோதனைகள் நிரூபித்துள்ளன. பல ஆண்டுகள் மூலநோயால் துன்புற்றோர் கூட, ''மூலநோய்ப் பிரச்சனை முடிந்து விட்டது'' என்று மகிழ்வதாக கூறப்படுகிறது.

இப் புதிய மருந்தான ப்ரெபரேஷன் எச் களிம்பு, மூலத்தை சுருக்க உதவுவதோடு, நமைச்சலை நீக்கி வலியைத் தணிக்கிறது; மலப் போக்கின் போது வலியைக் குறைத்து எளிதாக்குகிறது.

ப்ரெபரேஷன் எச், இடும் குழாயுடன், 30 மற்றும் 50 கிராம் ட்யூபுகளில் எல்லா கெமிஸ்ட்டுகளிடமும் கிடைக்கிறது.

**இலவசம்!** மூல நோய் பற்றிய விளக்கப் புத்தகத்தைப் பெற 25 பைசா தபால் தலையுடன் எழுத வேண்டிய முகவரி: டிபார்ட்மெண்ட் PH-85, த.பெட்டி எண் 10133, பம்பாய் 400 001.

186 PH 92 TAM

---

அழகிய குளியலறைக்கு முற்றிலும் தேவை

## நெய்சரின் தனித்தன்மை வாய்ந்த டிசைன்கள், வண்ணங்கள் — அதனுடன் சேரட்டும் உங்கள் கற்பனை வளம்



இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் நெய்சரின் நம்பகமான கண்கவர் சாதனங்களை அழகிய வீடுகளில் காணலாம்.

குளியலறைகளில் உங்கள் கற்பனைத் திறனின் முத்திரையும் இருக்கட்டும் —

அழகிய அமைப்புகள், புதுமையான விளக்கொளி இவைகள் பின்னணியில், வண்ண வண்ண மலர்களில் நெய்சர்.



Neycer

நெய்சர் —
அழகிற்கு அழகு செய்யும்,
நீடித்து நிற்கும்.

OBM 8036 TM



கைக்கே அர்த்தமில்லை என்ற அவல நிலை ஏற்பட்டது.

''அம்மா, நான் அதை எப்படிச் சொல்வேன்? 'அவர்' ஒரு விபத்தில் மாட்டிக் கொண்டு ஆஸ்பத்திரியில் இருக்கிறார். பார்க்கச் சென்ற இடத்தில் துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்தது. பதினைந்து மகிழ்ச்சியில்லைகளை ஒரேயடியாக விழுங்கித் தொலைத்தேன். அப்புறம் என்ன? பைத்தியக்காரியாட்டம் சிரிக்கத் தொடங்கினேன். எல்லோரும் கண்ணீர் விட்டுக் கதறுகையில் நான் மட்டும் சிரித்தால் எப்படி இருக்கும்? என்னைக் கண்டபடி தூற்றி வீட்டை விட்டு வெளியேற்றி விட்டார்கள். அவர்களுக்குத் தெரியுமா என் நிலைமை? இப்பொழுது துக்கம் நெஞ்சை அடைக்கிறது. ஒரு வடிகால் தேவை. இந்தப் பேய்ச் சிரிப்பு என் பெரும் துக்கத்துக்கு எப்படி வடிகாலாகும்? எனக்கு அழ வேண்டும். நிறைய அழ வேண்டும். குடம் குடமாகக் கண்ணீர் விட்டால்தான் என் மனச் சுமை போய் ஆறுதல் பிறக்கும்... ஆனால் அழ முடியவில்லையே? அப்பாவின் அதிசய வில்லை என் அழும் சக்தியை அநியாயமாகப் பறித்து விட்டதே!''

அவள் அழ முயன்றாள். அந்தப் பேய்ச் சிரிப்புத்தான் மடை திறந்தாற் போல் பொங்கி வந்து அவளை நிலைகுலைய வைத்தது.

யமுனா மகளை இழுத்து மடியில் போட்டுக் கொண்டு பச்சிளம் குழந்தைக்குச் செய்வது போல் முதுகைப் பரிவுடன் தடவினாள். அனுமார் பிரசாதத்தை நெற்றியில் இட்டாள். ''சாமியை நினைத்துக்கொள், எல்லாம் சரியாகிவிடும்'' என்றாள்.

சற்றைக்கெல்லாம் அனுவின் கண்களிலிருந்து நீர் வரத் தொடங்கியது. பிறகு கொட்டத் தொடங்கியது. பிறகு பிரளயமாயிற்று. அவள் முக விக்கம் போன இடம் தெரியவில்லை. ''அம்மா, என்ன சுகம், என்ன சுகம்'' என்று அடிக்கடி அரற்றினாள். கண்ணீர் மடியை நனைத்துக் கொண்டு ஆறாக ஓடுவதைக் கண்ட அன்னையின் மனத்தில் இன்பம் பொங்கியது. அவள் சிரிக்கவில்லை—அழுதாள். பிழியப் பிழிய.

பக்கத்து அறையில் மௌனமாகக் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தார் ஒரு விஞ்ஞானி — தன் மகளுக்காக அல்ல, முகம் தெரியாத மற்றவர்களுக்காக!

---

**பெ**யரில்தான் பொங்கல். படம் முழுவதும் தெரிவது வெறும் கல்தான்.

நல்லதொரு அழுத்தமான திரைக்கதை அமைந்து படமாகி அது 'ஏ' சர்டிபிகேட் பெறுவதில் தவறில்லை. ஆனால் 'ஏ' சர்டிபிகேட் பெறவேண்டும் என்பதற்காகவே கதை எழுதி, வசனம் தயாரித்து, காட்சிகளை அமைப்பது அருவருக்கத்தக்கது.

தன் கண் முன்னே சீரழியும் விதவைத் தாயை மகளே நடத்தை கெட்டவள் என்று சாடுகிறாள்! தாயின் காதலனை, அவன் விரும்பப்படி 'அப்பா' என்று அழைக்க அவள் விரும்பவில்லை. 'அங்கிள்' என்று அழைக்கிறாள். அந்தக் குடிகாரன் அந்தக் கட்டிளங் குமரியிடம் இறங்கிப்போய், அவளையே கெடுக்க முயல்கிறான். 'அப்பா' என்று அவள் தன்னை அழைத்திருந்தால் அவனுக்கு அந்த ஆசை வெறி உண்டாகியிருக்காதாம்! சொல்கிறான். இதை நாம், நம்ப வேண்டும்!

படம் முழுவதும் ரயில் ராதிகாவின் ஆதிக்கம்தான். டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட் வாத்தியாரைக் காதலித்து, அவனுடன் ஓடி, அந்தக் கோழையினால் கைவிடப்பட்டுச் செல்வி (ராதிகா) அவமானப்பட்டுத் திரும்புவது ஒரு தனிக் கதை. தைரியம் இல்லாத கோழை வாத்தியார் பாகத்தை ஏற்றவர் நன்றாய் நடித்திருக்கிறார்.

வல்லபன் திரைக் கதை எழுதி, உரையாடல்களை எழுதி, படத்தின் டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றிருக்கிறார்! என்னத்தைச் சொல்ல! ஒரு நல்ல படத்துக்கு உபயோகப் படக்கூடிய கச்சா பிலிமை வீணாக்கிவிட்டாரே!

**- கார்த்தன்**





# ஜெயலலிதா

# உறவின் கைதிகள்

3

She was a phantom of delight
When first she gleamed upon my sight;
A lovely apparition, sent
To be a moment's ornament.

William Wordsworth - 1770. - 1850.

**ரா**ஜீவுடைய பார்வை உஷாவின் மீது பட்டது. அங்கேயே நின்றுவிட்டது. ஏன் நிற்காது? நட்சத்திரங்கள் நிறைந்த வானில் முழு நிலவைப் போல் அந்த ஒன்பது கல்லூரி மாணவிகளின் நடுவே அவள் தனித்துக் காட்சியளித்தாள்.

ராஜீவ் தனது வாழ்நாளில் எத்தனையோ அழகிகளைக் கண்டிருந்தான். ஆனால் இவள்! இவள் உண்மையிலேயே வித்தியாசமானவள். ஓர் அபூர்வப் படைப்பு!

பால் வடியும் கபடமில்லாத முகம்; மழு மழுவென்ற வெண்ணெய்த் தோல்; நீளமான கருத்த தலைமுடி; அதைப் பின்னுக்குப் படிந்து வாரி கழுத்துக்குப் பின் ஒரு கிளிப் மாட்டி முடியை இடுப்பு வரை தொங்க விட்டிருந்தாள். அகன்ற கருவிழிகள் - அவற்றின் ஓரத்தில் பட்டும் படாதவாறு கருப்புமைப் பென்சிலால் லேசாகச் சிறு கோடு வரைந்திருந்தாள். செழுமையான உதடுகளின் மேல் லேசாக ஆரஞ்சு லிப்ஸ்டிக்கின் சாயம். சங்கு போன்ற காதுகளில் எளிமையான ஒற்றை முத்துத் தோடுகள். மற்றபடி வேறு எந்த நகைகளையும் அவள் அணிந்திருக்கவில்லை. வெள்ளை ஆர்கண்டி புடவை உடுத்தியிருந்தாள். அதன் மீது சிறிய பச்சைப் பூக்கள் அச்சிடப்பட்டிருந்தன. அதே பச்சை நிறத்தில் மேட்சிங் ரெடிமேடு சோளி. இடது கையில் வெள்ளைவெளேல் சீக்கோ கைக்கடிகாரம் அணிந்திருந்தாள். "இளமை", "அழகு" என்ற இரண்டு வார்த்தைகளுக்கு அகராதி விளக்கமாய்த் தோற்றமளித்தாள் உஷா.

கொடி போன்ற ஒல்லியான உடல். உட்கார்ந்திருந்தால் அவளுடைய

உயரத்தைச் சரியாக யூகிக்க முடியவில்லை. ஆனால் எப்படியும் ஐந்து அடி ஆறு அங்குலத்துக்குக் குறைந்திருக்காது என்று ராஜீவ் நினைத்தான்.

வெறும் கேலண்டர் படம் போன்ற உயிரற்ற அழகு அல்ல அவளுடையது. இளமையின் துடிப்பு; வேகம், உயிருடன் இருக்கிறோமே என்ற வெகுளித்தனமான ஆனந்தம், உற்சாகம்— அவள் உருவம் பூத்துக் குலுங்கும் உயிரோவியமாக இவற்றைத் தெளிவாகப் பிரதிபலித்தது.

அவளைக் கண்டதும் ராஜீவுக்குத் தன்னை அறியாமலேயே ஒரு புத்துணர்ச்சி பிறந்தது. பெரும் முயற்சி செய்தும் அவள் மீது இருந்த தன் பார்வையை அவனால் வேறு பக்கம் திருப்ப இயலவில்லை.

கல்லூரி ஆண்டு விழாவுக்குத் தலைமை வகிக்குமாறு உஷா கேட்டதற்குப் பதிலாக ''வெல்.... ஐ.... டோன்ட் நோ...'' என்று தயங்கியபடி ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

அதற்குள் உஷா குறுக்கிட்டு, ''ப்ளீஸ் சார், முடியாதுன்னு சொல்லிடாதீங்க சார், உங்களுக்கு எத்தனையோ எங்கேஜ்மென்ட்ஸ் இருக்கும்னு எங்களுக்குத் தெரியும். இருந்தாலும் எப்படியாவது பெரிய மனசு பண்ணி எங்க பங்க்ஷனுக்கு வந்திங்கன்னு, நாங்க ரொம்பப் பெருமைப்படுவோம், சார்! நாங்க எல்லோருமே உங்க விசிறிகள்; ப்ளீஸ் டோன்ட் டிஸப்பாய்ன்ட் அஸ்'' என்றாள் அவசரமாக.

தனக்கு எங்கிருந்து இவ்வளவு துணிச்சல் வந்ததென்று உஷாவுக்கே ஆச்சரியமாய் இருந்தது. சுட்டித்தனமும், துணிவும், புத்திக்கூர்மையும் அவளது பிறவிக் குணங்கள். இருந்தாலும் -- ராஜீவைப் போன்ற ஒரு பெரிய புள்ளியைச் சந்திக்கும் போது, இவ்வளவு தூரம் தைரியமாகப் பேச முடியுமென்று அவளே நம்பியிருக்கவில்லை.

ஆரம்பத்தில், மாணவியரின் விண்ணப்பத்தை ஏற்கும் எண்ணம் சிறிதளவும் ராஜீவுக்கு இருக்கவில்லை. கல்லூரி ஆண்டு விழா தினத்தன்று தான் வெளியூர் போய்விடுவதாகவும்; ஊரில் இல்லாத காரணத்தால் அவ்விழாவில் கலந்துகொள்ள இயலாது என்றும் ஏதாவது சாக்குக் கூறி விடலாம் என்று முதலில் திட்டமிட்டிருந்தான். அப்படிச் சொல்வதால் ஒரே கல்லால் இரு கனிகளை வீழ்த்தலாம். ஒன்று - அவ்விழாவில் கலந்து கொள்ளாமல் தப்பித்துக் கொள்ளலாம். இரண்டு - மாணவியரின் கோரிக்கையை நிராகரிக்கும்போதிலும் அவர்கள் மனத்தைப் புண்படுத்தாமல் அதிலிருந்து நழுவிக் கொள்ளலாம். ''ஊரில் இருந்தால், நிச்சயம் வந்திருப்பேன்'' எனச் சொல்லலாமில்லையா?

அப்படி எண்ணியிருந்த ராஜீவுக்கு, ஏனோ அவ்வாறு கூற மனம் ஒப்பவில்லை. உஷாவையே கண் இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தான். இந்தப் பெண் ஏனோ அவனை அப்படி வசீகரித்தாள். அவள் விழிகளின் மின்னல் பார்வை அதற்குள் புதைந்து கிடக்கும் குறும்புத்தனம் தண்ணீர் விழுங்கினால் அதுகூடத் தொண்டையில் இறங்குவது கண்ணுக்குத் தெரியுமோ என்று நினைக்கத் தூண்டும் அந்த ஒளி கசியும் தோல் நிறம்!

இவளை மறுபடியும் காண வேண்டும்; எப்படியாவது சந்திக்க வேண்டும் இப்போதைக்கு அதற்கு ஒரே சந்தர்ப்பம், அந்தக் கல்லூரி விழா. அதற்குத் தலைமை வகிக்க மறுத்தால், மீண்டும் இவளை எங்கே, எப்படிக் காண்பது?

தன்னையே கேட்டுக் கொண்டான். ''டேய் ராஜீவ்! உனக்கு என்ன ஆகிவிட்டது? ஏன், இவளை மறுபடியும் அவசியம் சந்தித்துத்தான் ஆகணுமா?'' தனக்கே பதில் கூறிக்கொண்டான் ''ஆமாம்! ஆமாம்!''



'இவள் சாதாரணமானவள் இல்லை. பார் ராஜீவ், நீயே பார்! பக்கத்தில் இருக்கும் மற்றப் பெண்களையும் பார். அவர்களுக்கும் அழகில்லை என்று சொல்ல முடியாது. ஆனால், இவளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது? அவர்கள் எங்கே, இவள் எங்கே! எப்பேர்ப்பட்டவர்களும் இவள் பக்கத்தில் நிற்கும் போது, மங்கித்தான் தெரிவார்கள்!'

''ப்ளீஸ்சார் வரேன்னு சொல்லுங்க சார்'' உஷா குழந்தைத்தனமாக வற்புறுத்தினாள்.

திடீரென்று அவன் உடலில் மின்சாரம் பாய்ந்தது போல் ராஜீவுக்கு ஓர் உணர்வு. ''டேய் ராஜீவ்! பெண்களிடம் அலுப்புத் தட்டித் திகட்டிப்போன உனக்கு, ஒரு பெண்ணிடம் இப்படியொரு பவர்ஃபுல் அட்ராக்ஷன் உண்டாகி எத்தனை வருடங்கள் ஆகிவிட்டன? அந்த உணர்வே செத்துவிட்டது என்று நினைத்திருந்தாய். இனி எவளாலும் அதை மீண்டும் ஏற்படுத்த முடியாது என நினைத்தாய்! ஆனால் இவள் அந்த உணர்வை மீண்டும் பிறப்பித்திருக்கிறாள்: டேய் ராஜீவ் இவளை விட்டுவிடாதே!'

தன் உணர்ச்சிகளின் வேகம், தன் எண்ணங்களின் போக்கு, அவனுக்கே பெரும் வியப்பைத் தந்தது. திடீரெனக் கரகரத்துப் போன குரலில் ''உங்க காலேஜ் பங்க்ஷன் என்னிக்கு?'' என்று விசாரித்தான்.

''இந்த மாசம் 15ந் தேதி சார்!'' மீண்டும் உஷாவே பதில் சொன்னாள்.

''சரி, நான் உங்க பங்க்ஷனுக்கு வரேன்.''

ராஜீவுக்கே ஆழ்ந்த வியப்பு! 'என்ன ஆகிவிட்டது எனக்கு?' புரியவில்லை.

''ஓ! தேங்க்யூ சார், தேங்க் யூ!'' உஷா மட்டும் வேறு இடத்தில் இருந்திருந்தால் துள்ளிக் குதித்திருப்பாள். ஒரு டான்ஸே ஆடியிருப்பாள்! அவ்வளவு எளிதில் ராஜீவ் ஒப்புதல் தெரிவிப்பானென்று அவள் கனவிலும் எண்ணியிருக்கவில்லை.

**உ**ஷாவின் மனத்தில் சொல்லில் அடங்காத உத்வேகம் பொங்கி எழுந்தது. அவளுக்கு வயது பதினெட்டு. அவள் பி.ஏ. இரண்டாம் வருடம் படித்துக் கொண்டிருந்தாள். அவள் ராஜீவ் குமாரின் தீவிர ரசிகை. முதன் முதலாக சினிமா பார்க்கத் தொடங்கிய வயதிலிருந்தே, ஞாபகத்துக்கு எட்டிய வரை, அவள் ராஜீவின் ரசிகையாக இருந்தவள். அவன் படம் எதையும் இயன்றவரை பார்க்காமல் அவள் விட்டுவைக்கமாட்டாள். ராஜீவ் என்றால் உஷாவுக்குச் சாதாரண அபிமானம் இல்லை, ஒரே ஹீரோ வொர்ஷிப்தான்! அவனை எந்த வகையிலும் மிஞ்சக் கூடிய



ஆண்மகன் உலகத்திலேயே இருக்க முடியாது என்பது உஷாவின் அசைக்க முடியாத அபிப்பிராயம். அதுவரை அவனைத் திரையில் பார்த்திருந்தாள். நேரில் காண்பது இதுவே முதல் முறை. ''எவ்வளவு அழகாக இருக்கார்! படங்களிலே இருக்கிற மாதிரியே இருக்காரே!'' என நினைத்து வியந்தாள்.

திடீரென்று ஹால் முழுதும் ''தேங்க்யூ! தேங்க்யூ சார்'' என்ற கோஷ்டி கானம் ஒலித்தது. அங்கே கூடியிருந்த மற்ற பெண்கள் எல்லோரும் ஒரே சமயத்தில் புத்துயிர் பெற்று விட்ட மாதிரி விழித்துக் கொண்டனர்.

சிரித்துக் கொண்டே, தன் விரிவான பார்வையால் ராஜீவ் அனைவரையும் ஒரு முறை தழுவினான். ''மை ப்ளெஷர்'' என்றான். மறுபடியும் உஷா பக்கம் விழிகளைத் திருப்பினான். ''உன் பெயர்?''

''உஷா.''

''லவ்லி நேம்'' இந்த வார்த்தைகளுக்குத் துணையாக அவளை ஓர் உருகவைக்கும் பார்வை பார்த்தான். அந்தப் பார்வை உஷாவை மெய்சிலிர்க்கச் செய்தது.

எங்களை யெல்லாம் விட்டுவிட்டு உஷா வுடன் மட்டும் பேசிக் கொண்டிருக்கிறீரே என்ற பொறாமை உள்ளத்தை உறுத்த, ''ரியலி சார், வீ ஆர் த்ரில்ட்! நாங்க கேட்டவுடனே நீங்க இவ்வளவு பெருந்தன்மையோட ஒத்துக்குவீங்கன்னு நாங்க எதிர்பார்க்கவே யில்லே'' என்றாள் கமலா.

தான் மட்டும் சும்மா இருப்பதா என்பது போல இன்னொரு மாணவி ராதா, ''ஆமாம் சார்! இட் ஈஸ் வெரி க்ரேஷியஸ் ஆஃப் யூ! தேங்க் யூ சார்'' என்று தன்பங்கிற்கு இரண்டு வார்த்தைகளைக் கொசுறுக் கொட்டினாள்.

''இத்தனை சார்மிங் யங் லேடீஸ் வீடு தேடி வந்து என்னை அழைக்கும்போது, என்னால் மறுக்க முடியுமா?'' என்று ராஜீவ் பதில் அளித்தான். மேலெழுந்தவாரியாக அந்த வார்த்தைகள் அங்கிருந்த பெண்கள் அனைவருக்கும் மொத்தமாகக் கூறப்பட்ட பதிலாக அமைந்தாலும், அவன் பார்வை மட்டும் உஷாவின் மீதே இருந்தது.

உஷாவும், ''இட்ஸ் ரியலி வெரி கைண்ட் ஆஃப் யூ சார்'' என்று கூறிக்கொண்டே, பரவசமடைந்த நிலையில் அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவனுடைய கள்ளங் கபடமில்லாத கண்கள், அவன்பால் அவளுக்கிருந்த மோகத்தை வெளிப்படுத்தின. ராஜீவுடைய நடை, உடை, பாவனை எல்லாமே அவளை மிகையாகக் கவர்ந்தன.

காந்தக் கல் மாதிரி உஷாவின் மீதே ஒட்டிக் கொண்டிருந்த தனது பார்வையை ராஜீவ் வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு தனது கைக்கடிகாரத்தின் மீது திருப்பினான். நேரம் ஓடிக் கொண்டே இருந்தது. ''ஏற்கனவே நான் இன்னிக்கு ஷூட்டிங்குக்கு லேட். ரொம்ப நேரமாச்சு. இஃப் யூவில் எக்ஸ்க்யூஸ் மீ, நான் இப்போ கிளம்பறேன்.''

ராஜீவ் எழுந்து நின்றான். உஷா உட்பட ஒன்பது பெண்களும் கூடவே எழுந்தனர்.

''சுரேஷ்'' ராஜீவ் சற்று உரக்கக் குரல் கொடுத்தான்.

''சார்?'' மறு விநாடியே அவன் பக்கத்தில் சுரேஷ் தோன்றினான்.

''சுரேஷ், இவங்க காலேஜ் பங்க்ஷனுக்குத் தலைமை தாங்க ஒத்துக்கிட்டிருக்கேன். தேதி, டைம், இடம் எல்லா டீடெய்ல்ஸையும் குறிச்சு வச்சுக்க. பங்க்ஷன் அன்னிக்கு எனக்கு ஞாபகப்படுத்து.''

''சரி சார்.''

''மை டியர் சார்மிங் யங் லேடீஸ், இன்னும் கொஞ்ச நேரம் உங்க கூடப் பேசிக்கிட்டு இருக்கலாம்னு தோணுது. அன்ஃபார்ச்சுனேட்லி, வேலைக்குப் போக வேண்டிய நிர்ப்பந்தம். நேரமில்லே. எக்ஸ்யூஸ் மீ. உங்களை யெல்லாம் சந்திச்சதிலே எனக்கு ரொம்ப சந்தோஷம்.'' மீண்டும் கூறிய வார்த்தைகள் மொத்தத்தில் எல்லோருக்கும் என்றாலும், ராஜீவுடைய கண்கள் நேராக உஷாவை மட்டுமே நோக்கின.

''பை'' ராஜீவ் ஹாலை விட்டுப் போய் விட்டான்.

''குட் பை சார்!''

''தேங்க்யூ சார்!''

''தேங்க்யூ மிஸ்டர் ராஜீவ்!''

உற்சாகம் நிறைந்த அந்த இளம் குரல்கள் வராந்தாவரை அவனைப் பின்தொடர்ந்தன. பளிங்கு வராந்தாவிலிருந்து மூன்று படிகள் போர்ட்டிகோவுக்கு இறங்கின. அங்கே அவனுடைய பெரிய வெள்ளை நிற பென்ஸ்-600 அவனுக்காகக் காத்திருந்தது.

முதல் படியில் ராஜீவ் நின்றான். திரும்பினான். சிரித்த படியே கையை உயர்த்தி, ஒன்பது பெண்களிடமும் விடைபெறுகின்ற தினுசில் கையை அசைத்த போதிலும், அவன் விழிகள் மீண்டும் ஒருமுறை உஷாவை நாடின. கண்டுபிடித்தன. சந்தித்தன.

நட்சத்திரங்கள் போல் பிரகாசித்த தனது விழிகளை உஷா அவன் விழிகளோடு இணைய விட்டாள். அவன் தன்னையே உற்றுப் பார்ப்பதை உணர்ந்து, அவனுக்காகத் தனியாகப் புன்னகைத்தாள். தன் கையை உயர்த்தி மெல்ல அசைத்தாள்.

அதன் பிறகுதான் ராஜீவ் திரும்பினான். படிகளில் இறங்கி காரின் பின்ஸீட்டில் அமர்ந்தான். டிரைவர் வேகமாகக் காரை ஓட்டிச் செல்ல, ஒரு நொடியில் கார் கேட்டைத் தாண்டி, மறைந்துவிட்டது. (தொடரும்)



''என்னலே, சிரிக்கிட்டே போறீர்?''
''யாரும் பாக்காமே ஸ்டாம்ப் ஒட்டாத கடுதாசியிலே நான் பெட்டியிலே போய்ட்டு வந்துட்டேன்!''

# ஓர் உரையாடல்!

ஏனு ராயர்சுவாமி இந்த வருஷம் ஆடி அமாவாசைக்கு கோடிக்கரையா? ராமேஸ்வரமா?

ராயர்சுவாமி: இரண்டும் இல்லே சுவாமி. காசிக்குப் போகிறேன். இந்த வருஷம் ஆடி அமாவாசை கயாவிலே. கயா சிரார்த்தம் பண்ண ரொம்ப ஆசை. வருஷா வருஷம்தான் ராமேஸ்வரம் போறோம். இந்த வருஷம் மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்காரா ஏற்பாடு செஞ்சிருக்கா. ஆடி அமாவாசை கயாவிலேன்னு 15 நாள் தான். நல்ல தூங்கும் வசதியுள்ள ரயில் பெட்டி. ராமேஸ்வரம் போய் வந்தாலும் இந்த நாட்கள் எப்படியும் ஆரது. L.T.C.க்கு வெளச்சர் தரா. எப்படியும் கிட்டத்தட்ட பாதி பணம் நமக்கு GOVT.லேருந்து வந்துடரது. எல்லாம் கணக்குப் போட்டுப் பார்த்துதான் ரெண்டு பெர்த் ரிசர்வ் பண்ணிட்டேன்.

அது சரி சுவாமி. எப்போ புறப்படரா?

ராயர்சுவாமி: இதோ பாரும். 31-7-80லே ஒரு III Tier 1-8-80லே ஒரு III Tier ரெண்டு பெட்டிகள் புறப்படரது. முன்கூட்டி ரிசர்வ் பண்ணிண்டா வசதியான பெர்த்துகள் கிடைக்கும். கடைசிலே போனா அப்பர் பெர்த்துகள்தான் இருக்கும். எனவேதான் நான் முன்கூட்டி ரிசர்வ் பண்ணிட்டேன்.

அப்படியா, நானும் இரண்டு சீட் எனக்கும் ஆத்துக்காரிக்கும் ரிசர்வ் பண்ணிடரேன்... ...ஆமா அமர்நாத் யாத்திரை கூட அவா அரேன்ஜ் பண்ணியிருக்காப்பலே இருக்கே!

ராயர்சுவாமி: ஆமா 15-8-80லே இரண்டு III Tier பெட்டிகள் புறப்படரது. ஒண்ணு பம்பாய் வழியா போரது. மத்தது நாக்பூர், இடார்சி வழியா போறது. நம்ம S. K. நரசிம்ம அய்யங்கார், ராமசுவாமி அய்யர், குஞ்சிதபாதம் பிள்ளை, ராமசாமி படையாச்சி, குப்புசாமி கௌண்டர், ரங்கநாதம் நாயுடு எல்லோரும் போரா. எனக்கு வயசாயிடுத்தோல்லியோ நம்மாலே அந்த யாத்திரை எல்லாம் சமாளிக்க முடியாது. அமர்நாத் யாத்திரைக்கு உடல் வலுவும் உள்ளத்தில் உரமும் வேணும்.

அது சரி. எனக்கு ஒரு அட்வைஸ் பண்ணுங்கோ? நான் காசி யாத்திரை போறதா? அமர்நாத் போறதா?

ராயர்சுவாமி: இதோ பாரும், பித்ரு கர்மாக்கள் எல்லாம் காசியிலும், கயாவிலும் ஏற்கனவே முடிச்சுட்டு இருந்தா இப்போ அமர்நாத் மஹாதேவ தரிசனத்துக்கு போகலாம். அப்படி இல்லேன்னா மொதல்லே காசிக்குப் போய் வாரும், அடுத்த வருஷம் அமர்நாத் போகலாம்.

மேலும் விவரங்களுக்கு:

**ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்**

**புது நெ. 21. அய்யாபிள்ளை தெரு. திருவல்லிக்கேணி. மதராஸ்-600 005**

டெலிபோன்: **841957**

| **Sri T. V. Ramamurthy Aiyer** | **Smt. Neela Subramaniam** | **N. Lakshmi Narayanan** |
|---|---|---|
| Retd. L.I.C. Officer, | G. 429, Reserve Bank Quarters, | General Merchants, |
| 88, North Street, | M.M. Marg., Bombay Central, | 263, Gandhi Road, |
| KEELAYUR, Tirukkoilur, S.A. | Bombay-400008 Ph: 891522 | Sivagangai, Ramnad Dt. |

# பழனி டாக்டர் எஸ். காளிமுத்து



Dr. S. காளிமுத்து

இன்றைய முன்னணி பிரபல பழனி வைத்திய திலகம், வைத்தியராஜ் டாக்டர் எஸ். காளிமுத்து R. M. P. (IND) V. V. C. A. M. I. H. அவர்களின் வெற்றிகரமான மாதாந்திர சுற்றுப் பயணத்தில் எல்லா வியாதிகளுக்கும் அன்பர்கள் நேரில் சந்தித்து ஆலோசனைகளும் மருந்துகளும் பெற்று சுகவாழ்வு வாழ அழைக்கின்றோம். வணக்கம்.

தங்களின் உடல் மிகவும் பலமில்லாமல் இளைத்து, உடல் வலு வில்லாமல் குடும்ப வாழ்க்கையில் நிம்மதியில்லாமல் வயோதிகரைப் போல் களைப்பு மேலிட்டு, வேலைகளைச் சரவர செய்ய இயலாமை — இதனால் கஷ்டப்படுகிறீர்களா? வாலிப வயதில் தெரிந்தும், தெரியா மலும் செய்திட்ட தவறுதல்களே இப்போது உடல் கெட்டு பலஹீன மடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலஹீனம், உடல்வலி, களைப்பு, தூக்கக் குறைவு, ஆயாசம், பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி, தாய் தந்தையாரிடமும் மற்றவர்களிடமும் சொல்ல முடியாமல் மனவேதனையும் கஷ்டமும் அடைந்து, நிம்மதியில்லாமல் வாழ்கிறார்கள். மேற்படி காரணங்களால் உடல் நலம் பாதிக்கப்பட்டவர்களும், கவலைப்பட வேண்டாம். இம்மாதிரியான வியாதிஸ்தர்கள் 81 வருட அனுபவம் பெற்ற நமது சாஸ்திரிய முறையான மிக உயர்தரம் சாப் பிட்டாலே, எடை அதிகப்பட்டு, இரத்த விருத்தியுடன் உடல் பலமடைந்து புதிய சக்தி, புத்துணர்ச்சி பெற்று நிம்மதியான வாழ்க்கை வாழலாம். எவ்விதமான பத்தியமும் இல்லை. ஆர்டரில் தேவைப் பட்ட மருந்தின் விலைகளைக் குறிப்பிட்டு எழுதவும். வி. பி. பி. தபால் பார்சலில் பெற இன்றே எழுதுங்கள். சென்னையிலும், பழனியிலும், கேம்புகளிலும் நேரில் பெறலாம். மருந்தும் விருந்தும் மூன்று நாள் என்பது பழமொழி. மருந்து உபயோகிக்கும்பொழுதே பலனைக் காணலாம். வி. பி. பி. தபால் செலவு இலவசம். வெறும் கடிதம் கவனிக்க இயலாது. சித்த வைத்திய மருந்துகளும், பழனி மருந்துகளும் நல்ல பலன் தரும் என்பதை அறியவும்.

—:ஒரு மாத சிகிச்சை மருந்துகள்:—

**ஸ்பெஷல் லேகியம், ஸ்பெஷல் பஸ்பம் ரூ. 90.**

**தங்கபஸ்பம், சிட்டுக்குருவி லேகியம்**

**90 வேளை ரூ. 180. 60 வேளை ரூ. 120. 30 வேளை ரூ. 60**

**எங்கள் மாபெரும் வெற்றிகரமான மாதாந்திர சுற்றுப்பயண தேதி விலாசங்கள் கவனிக்கவும்**

| தேதி | விலாசம் |
|---|---|
| 1-ந் தேதி | திருநெல்வேலி நெல்லை லாட்ஜ், ஜங்ஷன் ரோடு. போன்: 147. காலை 8 மணி முதல் 12 மணி வரை |
| 1-ந் தேதி | நாகர்கோவில் பகல் 2 மணி முதல் 4 மணி வரை. ஸ்ரீ உடுப்பி கிருஷ்ண பவன், தபாலாபீஸ் சந்திப்பு |
| 2-ந் தேதி | மதுரை மணீஸ் கிளப், டவுன் ஹால் ரோடு. போன்: 2019. காலை 8 மணி முதல் மாலை 2 மணிவரை |
| 2-ந் தேதி | புதுக்கோட்டை. மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை. சாந்தி லாட்ஜ். (வசந்தா லாட்ஜ்) போன்: 46 |
| 3-ந் தேதி | காரைக்குடி காலை 9 மணி முதல் 11 மணி வரை. AVM. PL ரெஸ்ட் ஹவுஸ். போன்: 309 |
| 3-ந் தேதி | பட்டுக்கோட்டை. பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை. வசந்த பவனம். மணிக்கூண்டு சமீபம் |
| 3-ந் தேதி | மன்னார்குடி. மாலை 4-30 மணி முதல் 6 மணி வரை. மன்னை லாட்ஜ். ஸ்டேட் பாங்க் அருகில் |
| 4-ந் தேதி | திருச்சி ஹோட்டல் அஜந்தா, ஜங்ஷன் ரோடு. காலை 8 மணி முதல் மாலை 2 மணி வரை. போன்: 4501 |
| 4-ந் தேதி | கரூர். மாலை 3-30 மணி முதல் 5 மணி வரை. பெரியார் லாட்ஜ். ஜவஹர் பஜார் |
| 5-ந் தேதி | தஞ்சாவூர். காலை 8 மணி முதல் 12 மணி வரை. ராஜா ரெஸ்ட் ஹவுஸ். போன்: 57 |
| 5-ந் தேதி | திருவாரூர். மாலை 2 மணி முதல் 4 மணி வரை. அபூபக்கர் பில்டிங் (EMR) நாகை ரோடு, விஜயபுரம் |
| 5-ந் தேதி | நாகப்பட்டினம். இளைய விலாஸ், ரயில்வே ஸ்டேஷன் எதிரில் மாலை 5 மணி முதல் 6 மணி வரை |
| 6-ந் தேதி | காரைக்கால். அசோக் லாட்ஜ், பஸ் ஸ்டாண்ட் எதிரில் காலை 8 மணி முதல் 10 மணி வரை |
| 6-ந் தேதி | கும்பகோணம். காலை 12 மணி முதல் பகல் 2 மணி வரை. தாஜ்மஹால் லாட்ஜ், பொற்றாமரைக்குளம் |
| 6-ந் தேதி | மாயவரம். மாலை 3 மணி முதல் 4-30 மணி வரை. காளியாகுடி லாட்ஜ், பெரியகடை வீதி, போன்: 460 |
| 6-ந் தேதி | சிதம்பரம். மாலை 5-30 மணி முதல் 7 மணி வரை. ஜெயராம் லாட்ஜ். |
| 7-ந் தேதி | பாண்டிச்சேரி. காலை 8 மணி முதல் 9-30 மணிவரை. அருணா லாட்ஜ், ஜவஹர்லால் வீதி, போன்: 352 |
| 7-ந் தேதி | கடலூர். NT காலை 10-30 மணி முதல் 12 மணி வரை. ஹோட்டல் பிருந்தாவனம் |
| 10, 11-ந் தேதி | சென்னை, நியூ உட்லண்ட்ஸ், எட்வர்ட் எலியட்ஸ் ரோடு. காலை 9 முதல் 12, மாலை 3 முதல் 6 மணி வரை |
| 12-ந் தேதி | பெங்களூர் சிட்டி. ஹோட்டல் பிராட்வே. காலை 8 மணி முதல் பகல் 2 மணி வரை. கெம்பா கவுடா ரோடு |
| 13-ந் தேதி | சேலம். பகல் 2 முதல் 5 வரை. லக்ஷ்மி ராஜ்பவன் லாட்ஜ், டவுன் ரயில்வே ஸ்டேஷன் எதிர். போன்: 2301 |
| 17-ந் தேதி | சென்னை. நியூ உட்லண்ட்ஸ், எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, காலை 9 முதல் 6 மணிவரை. போன்: 83111 |
| 18-ந் தேதி | சென்னை நியூ உட்லண்ட்ஸ், எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, காலை 9 முதல் 12 மணிவரை. போன்: 83111 |
| 19-ந் தேதி | பம்பாய். காலை 9 முதல் மாலை 6 வரை. பிரகாஷ் லாட்ஜ், ரயில்வே சமீபம், செம்பூர். போன்: 521049 |
| 20-ந் தேதி | பம்பாய். காலை 9 முதல் 10 மணிவரை. பிரகாஷ் லாட்ஜ், ரயில்வே சமீபம், செம்பூர். போன்: 521049 |

தியாகராயநகர் விற்பனை நிலையம்: 10/23, பாண்டி பஜார், (ராஜகுமாரி தியேட்டர் அருகில்) சென்னை-600017. போன்: 444076, 21448.

GOVT. REGD. T. M. No. 204811. REGD. 15443. MFG. LIC. No. 5

போன்: 316, 316A, **பழனி சித்தர் வைத்தியசாலை,** பழனி S. I. தந்தி: சித்தர்.

பழைய தாராபுரம் ரோடு. (இந்தியாவின் மாபெரும் வைத்திய ஸ்தாபனம்)

✖ நெல்லை ஆ. கணபதி, காந்தி கிராமம்

கே. திருச்சியில் 'சங்கராபரணம்' படம் பார்த்த தியேட்டரில் ஏ. சி. இல்லாததால், டிக்கட் கட்டணங்களைக் குறைத்திருந்தார்கள். சென்னையில் குறைப்பது இல்லையே?

ப: திருச்சி கலையரங்கில் நானும் 'சங்கராபரணம்' பார்த்தேன். கட்டணக் குறைவு மட்டுமல்ல; ஒவ்வொரு சீட்டிலும் ஒரு கை விசிறியும் வைத்திருந்தார்கள். சென்னைக்காரர்கள் யாரையும் காப்பியடிக்க மாட்டார்கள் — முக்கியமாக நல்ல விஷயங்களைப் பொறுத்தவரை.

✖ எஸ். வி. ராஜசேகர், சென்னை-5

கே. உமக்கு மோப்பம் பிடிக்கும் சக்தி உண்டா?

ப: லொள்... லொள்....

✖ சுதா மணிமேகலை, வேலூர்

கே. எய்தவன் இருக்க அம்பை நொந்ததுண்டா நீங்கள்?

ப: உண்டு. எய்தவன் இருக்குமிடம் தெரியவில்லை. அல்லது எய்தவனே யாரென்று தெரியவில்லை. இந்தச் சமயத்தில் நம் கண் முன்னே இருக்கும் அம்பைத்தானே நோக வேண்டும்? (இந்தச் சமயத்தில் உங்களைப் பற்றி ஒரு தகவலை வெளியிடப் போகிறேன். நீங்கள் ஒரு பெண் என்பதால் உங்கள் கேள்விக்கு அடிக்கடி பதில் அளிப்பதாகக் குற்றச்சாட்டு உண்டு. உங்கள் பெயர் டி. எஸ். சுதாகர் என்று தெரிவித்து எல்லாரையும் (நான் உட்பட!) ஏமாற்றத்துக்கு உள்ளாக்குகிறேன்.




# கடுகு பதில்கள்!




✖ அசோக் ஜெகன்னாதன், செங்கற்பட்டு

கே. உங்களுக்குப் பிடித்த ராகம்?

ப: 'அபூர்வ ராகம்' பிடித்திருந்தது. 'சங்கராபரணத்தில் சொக்கிப் போனேன். லேட்டாக 'ஒரு தலை ராகம்' என்னைக் கவர்ந்தது. ஆமாம், இந்தப் படம் உண்மையிலேயே எளிமையாக, இயற்கையாக, பிசிறு இல்லாமல் இருந்தது. முந்தானையை இழுத்து மூடிய கதாநாயகியைக் காண்பது அபூர்வம். இந்தப் படத்தில் இதுமாதிரி அபூர்வங்கள் நிறைய இருந்தன. அச்சாஜி இப்ராஹிம் லாப். வெரி குட் ராபர்ட்—ராஜசேகரன். சபாஷ் மிஸ்டர் ராஜேந்திரன்—ராஜ்.

✖ சரோஜா ராஜாராமன், சென்னை-38

கே. கல்கி வந்ததும் வராததுமாக எதை விழுந்து விழுந்து படிக்கிறாய் என்று கணவர் கேட்கிறார், என்ன பதில் சொல்வது?

ப: அவர் திட்டுவாரே என்று பார்க்காமல் உண்மையைச் சொல்லிவிடுங்களேன், கடுகு பதில்களைப் படிக்கிறேன் என்று!

✖ டி. எல். ரெட்டி, வேலிடுபட்டி

கே. நல்ல குடும்பம் பல்கலைக்கழகம் என்பது சரியா?

ப: இப்போது பல்கலைக் கழகங்கள் செயல்படும் விதத்தைப் பார்த்தால் சற்று யோசிக்க வேண்டியிருக்கிறது. நல்ல குடும்பம் ஒரு நல்ல பல்கலைக் கழகம் என்று கூறுவது தான், சரியாக இருக்கும். நல்ல பல்கலைக் கழகங்கள் நாளுக்கு நாள் அரிதாகி வருகின்றன.

✖ "விமலா, பெரம்பூர், சென்னை-11"

கே. வாலயில் என்று நாடகத்தில நடித்த தொரால் ராமசாமியின் வீடு விலாசம் என்ன என்று சொல்ல முடியுமா?

ப: அன்புள்ள சென்னை-11ல் வாழும் விமலா! அவரது வீடு விலாசம் எனக்கு தெரியாது! மன்னித்துவிடுங்கள்.

✖ கு. அருணாசலம், தென்காசி

கே. பள்ளி ஆசிரியருக்கும் பத்திரிகை ஆசிரியருக்கும் என்ன வித்தியாசம்?

ப: இப்படி வித்தியாசம் தெரியாத பலபேர் இருக்கிறார்கள் என்பது "கடுகு C/o மச்சார் கல்கி" என்று வரும் கடிதங்களிலிருந்து தெரிய வருகிறது.

✖ வி. ஜயகுமார், பரமகுடி

கே. நல்ல நண்பனை எப்படி அடைவது?

ப: நீங்கள் நல்ல நண்பனாக இருந்தால் போதும்! (நன்றி: சிங்-செள)

ரூ. 5 பரிசு பெறுபவர்

**டி. எல். ரெட்டி**
**வேலிடுபட்டி**
**பிள்ளையார் நத்தம்-627902**





# குழந்தைகள் மட்டுமே நடிக்கும் திரைப்படம்!



குழந்தைகள் ஆண்டின் ஒரு சிறப்பு அம்சமாக ஞானநந்தா பால நாட்டிய மண்டலியிலிருந்து 23 குழந்தைகளைத் தேர்ந்தெடுத்து புரந்தரதாசர் என்ற வண்ணப் படத்தை தயாரித்திருக்கிறார் ஸ்ரீ ஹரிதாஸ் ஸ்வாமிகள். இதில் நடிக்கும் அத்தனை குழந்தைகளும் பன்னிரண்டு வயதுக்குட்பட்ட பெண் குழந்தைகள். சீக்கிய, குஜராத்திக் குழந்தைகள் கூட உண்டு.

திரைப் படம் முழுதும் நாட்டிய நாடகம் பாணியில் எடுக்கப்பட்டிருக்கிறது. ஸாம்பிளுக்குக் கூட ஒரு பெரியவர் நடிக்கவில்லை.



முழுக்க, முழுக்க குழந்தைகளை வைத்து எடுக்கப்பட்ட ஒரே திரைப்படம் இந்த நாட்டிலேயே இது ஒன்றுதான் என்று சொல்ல வேண்டும். "குழந்தைகளுக்காகவும், குழந்தைகள் நடித்ததாகவும் உள்ள திரைப் படங்களுக்கு எல்லாச் சலுகைகளும் தர வேண்டும் என அரசு கூறுகிறது. நானும் கேளிக்கை வரி விலக்குக்காகக் காத்திருக்கிறேன். பிறகுதான் திரையிட வேண்டும்" என்று ஹரிதாஸ் ஸ்வாமிகள் குறிப்பிட்டார்.

இதற்கான நகைகள், உடைகள் எல்லாம் பிரத்யேகமாகச் செய்தார்களாம். ஏனெனில் குழந்தைகள் அளவில் வாடகைக்குக் கிடைக்கவில்லை. செட்களுக்கு ஏகமாகச் செலவழித்திருக்கிறார்கள். இரண்டரை மணி நேரப் படத்தை மூன்றே மாதங்களில் எடுத்திருக்கிறார்கள்.

புரந்தரதாசருக்கு இசையின் தெய்விக அம்சத்தை விஜயகரே விளக்குகிறார். ஒவ்வொரு ஸ்வரத்தின் பொருளையும் சொல்கிறார். ஒவ்வொரு ஸ்வரத்துக்கும் பிரத்தியேக நிறம் உண்டு என்றும் ஹரிகேசவ நல்லூர் முத்தையா பாகவதர் குறிப்பிட்டிருக்கிறார். இவைகளைச் சித்திரிக்கும் வகையில் அழகான நாட்டிய விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது புரந்தரதாசர் படத்தில்.

படமெடுக்கும்போது கிளிசரின் பயன் படுத்த அவசியமே நேரவில்லை. அந்தந்த பாத்திரத்தை உணர்ந்து துயரக் காட்சியில் குழந்தைகள் விசும்பி அழுதுவிட்டனராம். படப் பிடிப்பு முடிந்த பிறகும் அழுகையை நிறுத்தாத குழந்தைகளைச் சமாதானப் படுத்த பல மணி நேரம் ஆயின என்று ஹரிதாஸ் ஸ்வாமிகள் குறிப்பிட்டார். மேலும்,

"இந்தியாவில் மட்டுமின்றி, வெளி நாடுகளிலும் பெருமையாகக் காட்டத் தகுந்த உன்னதத் திரைப்படம் இது. அரசாங்கம் ஒத்துழைப்புத் தரவேண்டும்" என்கிறார் ஹரிதாஸ் ஸ்வாமிகள். **—குயிலி ராஜேஸ்வரி**

# கடல் ராணி

## சாண்டில்யன்

அத்தியாயம் 49

### துரித நிகழ்ச்சிகள்

நடுக் கூடத்தில் கையில் துப்பாக்கியுடன் உட்கார்ந்திருந்த துலாஜி, மாளிகையை விட்டுத் தன்னைக் கிளம்ப வேண்டாம் என்று தடுத்ததே சங்கர்பந்துக்குச் சீற்றத்தை அளித்ததென்றால் அவன் சொன்ன காரணங்கள் அவர் சீற்றத்தைமட்டுமின்றி திகைப்பையும் உச்ச நிலைக்குக் கொண்டு சென்றன. ''ராணியும் அனந்தும் அதே அறையில் தனித்திருப்பது இது முதல் தடவையல்ல. தவிர நீங்கள் வெளியில் சென்று அவர்கள் இருக்கும் கதவைத் தட்டினால் அதை எதிரிகளும் கவனிப்பார்கள்'' என்று கூறினான். ''அவர்களுக்கு ஏற்கனவே சில சந்தேகங்கள் இருக்கின்றன. அதை நாம் உறுதிப்படுத்த வேண்டாம்'' என்றும் சுட்டிக் காட்டினான் துலாஜி.

எதிரிகள் என்று துலாஜி யாரைக் குறிப்பிடுகிறான் என்பது சங்கர் பந்துக்குத் தெரிந்திருந்தும் சீற்றம் சித்தத்தைச் சரியாக இயக்காததால் ''எதிரிகளா? யாரவர்கள்?'' என்று விசாரித்தார் கடுமையான குரலில்.

''வேறு யார்? டெய்லர், இங்லண்ட், ஸில்வா'' என்று விடையளித்த துலாஜி ''ராணியும் அனந்தும் ஆடும் காதல் நாடகத்தை அவர்கள் நம்பவில்லை'' என்றும் தெரிவித்தான்.



சங்கர்பந்தின் முகம் மிகக் கடுமையாக மாறி அவர் கண்களில் நெருப்புப் பொறி பறந்தது. ''அப்படியானால் இது வெறும் நாடகமா?'' என்று நெருப்பென உதிர்ந்தன சொற்கள் அவர் உதடுகளிலிருந்து.

துலாஜி இதற்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லை. சிறிது சிந்தித்துவிட்டு, ''தளபதி இது நாடகமாகத்தான் துவங்கியது. ஆனால் இப்பொழுது நான் நிச்சயமாகச் சொல்ல முடியாது'' என்று நிதானமாகப் பேசினான்.

''அப்படி என் பெண்ணும்....'' என்று பந்த் சற்று நிதானித்து, ''அந்த...'' என்று துவங்கிப் பேச நா எழாமல் உணர்ச்சி வசப்பட்டு நின்றார்.

''அந்த அயோக்கியன் அனந்தும் என்று சொல்ல இருந்தீர்கள். நீங்கள் என்ன வசை பாடினாலும் அனந்த் எடுத்த காரியத்திலிருந்து விலக மாட்டான்'' என்றான் துலாஜி.

''எடுத்த காரியம் என்ன?'' பந்தின் கேள்வி முரட்டுத்தனமாக வந்தது.

''கடற் கொள்ளைக்காரர்களை அழிப்பது அல்லது செயலற்றுப் போகச்செய்து திரும்பத் தலைகாட்ட முடியாமல் அரபிக் கடலிலிருந்து துரத்தி விடுவது ஒன்று. பிரிட்டிஷாரின் கடல் பலத்தை முறிப்பது இரண்டு. இந்த இரண்டையும் நிறைவேற்றத்தான் நாங்கள் இங்கு வந்தோம். இது முடிந்ததும் இருவரும் இங்கிருந்து கடையைக் கட்டி விடுவோம்'' என்று துலாஜி விளக்கினாலும் சாந்தமடையவில்லை சங்கர் பந்த். ''நாம் மட்டும் கொள்ளைக்காரர்களல்லவா?'' என்றார்.

''நாம் அடிக்கும் கொள்ளை நாட்டுக்குப் பலனை அளிக்கிறது. நாட்டை வலுப்படுத்து



கிறது. நாம் மேல்நாட்டுக் கப்பல்களைக் கொள்ளையடிக்கிறோம். அதனால் நாடு பலவீனப்படாது. சேதப்படுவது வெள்ளையர் கப்பல்கள். இங்கிலண்டும், டெய்லரும் கொள்ளையடிப்பது சுயநலத்துக்கு. பிரிட்டிஷ்காரர் கனோஜியை அழிக்கப் பார்ப்பது அவர் கொள்ளைக்காரர் என்பதாலல்ல. அவர் கடற் படை பலம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யக் கனவுக்குப் பெரும் இடைஞ்சலாக இருக்கிறது. ஆகையால் நமக்கும் மற்ற கொள்ளைக்காரர்களுக்கும் வித்தியாசம் இருக்கிறது.'' துலாஜி இதை மிக நிதானமாகவும் சிறிது உணர்ச்சி வசப்பட்டும் சொன்னான்.

''இதற்கும், ராணியும் அனந்தும அறைக்குள் தனித்துப் படுப்பதற்கும் என்ன சம்பந்தமிருக்கிறது?'' என்று கேட்டார் சங்கர் பந்த்.

''இருவரும் படுக்கவில்லை'' என்றான் துலாஜி. பிறகு ஏதோ சிந்தித்துவிட்டுத் தனது கைத் துப்பாக்கியை இடையில் செருகிக்கொண்டான். ''உங்களுக்கு இன்னும் சந்தேகமாயிருந்தால் நீங்கள் அறையை நோக்கிப் போகலாம்'' என்று சொல்லிவிட்டு எழுந்திருந்தான்.

''இப்பொழுது நான் போய்க் கதவைத் தட்டுகிறேன். என்ன ஆகும்?'' என்று சீறினார் பந்த்.

''சிந்து தூர்க்கத்தின் ரகசியம் வெளிப்படும்'' துலாஜியின் குரலில் அலுப்பும் சங்கர் பந்தைப் பற்றிய எரிச்சலும் தெளிவாகவே தலை காட்டின.

வெளியே கிளம்பத் திரும்பிய சங்கர்பந்த் சட்டென்று திரும்பினார். ''ரகசியமா? என்ன ரகசியம்?'' என்று கேட்டார்.

''போய்த் தெரிந்து கொள்ளுங்கள்'' என்ற துலாஜிதான், உட்கார்ந்திருந்த மஞ்சத்தில் நன்றாகச் சாய்ந்து கால்களையும் நீட்டிக் கொண்டான்.

சங்கர் பந்துக்கு அவன் அலட்சியமும் தனது மாளிகைக்குச் சொந்தக்காரன்போல் நடந்து கொண்டதும் அடியோடு பிடிக்கவில்லை என்றாலும் வேறு வழியின்றி வெளியே நடந்தார். சங்கர்பந்த் பெரிய வீரனானாலும் அந்த வீரத்தைப் பயனற்றதாகச் செய்ய அவரிடம் அனுபவியமான பிடிவாதம் இருந்ததால் அதை அன்று செயல்படுத்த முற்பட்டு மாளிகையை விட்டு வேகமாக வெளியே நடந்தார்.

தெருவில் பயங்கர அமைதி நிலவிக் கிடந்தது. கோட்டைச் சுவர்மீது உலாவிய பந்துக் காவலர் கூடக் கோஷம் ஏதும் போடாமல் மௌனமாக நடந்ததால் பிசாசுகள் உலாவுவது போன்ற பிரமையே ஏற்பட்டது. கோட்டைச் சுவர்களையும் பார்த்து, தெருவின் கோடியில் சுவரை ஒட்டியிருந்த சிவாஜி சிலைக் கோவிலையும் ஒரு முறை பார்த்தார். பிறகு ஆகாயத்தில் கண்களை ஓட்டி நட்சத்திர மண்டலத்தைப் பார்த்தார். ''புஷ்பக் கொத்து போன்ற புஷ்யம் சிறிது வடக்கே நகர்ந்திருக்கிறது. நள்ளிரவு தாண்டி அரை ஜாமம் முடிந்து விட்டது'' என்று தமக்குள் சொல்லிக் கொண்டே பந்த், அடுத்தபடி தமது கண்களை சிவாஜி சிலைக் கோயிலுக்குப் பக்கத்து அறை மீது செலுத்தினார். அறைக் கதவு மூடியபடி இருந்தது. மூடப்பட்டிருந்ததைக் கண்டதும் மூட்டப்பட்ட சினத்துடன் வேகமாக நடந்தார் சங்கர் பந்த், அந்த அறையை நோக்கி. அறையை அடைந்ததும் சற்றுப் பலமாகவே கதவைத் தட்டினார்.

''யாரது?'' என்ற அனந்தின் குரல் உள்ளேயிருந்து ஒலித்தது. குரலின் தன்மையிலிருந்து அவன் உறக்கத்தில் இருப்பது புலனானதால் சங்கர் பந்த் நிதானமிழந்தார்.

''ரத்னாவும் தூங்கிவிட்டாளா?'' என்று கேட்டார் பந்த், தமது மகளின் இயற் பெயரைச் சொல்லி.

''ரத்னாவா?''. அனந்தின் குரலில் அரைத் தூக்கத்தின் சாயை வழிந்து கிடந்தது.

''ஆம்.''

''யாரது?''

''என்னிடம் விளையாடாதே. நான் ராணியல்ல.''

''வேறு யார்?''

''அவன் அப்பன்.''

''அவன் அப்பனுக்கு இங்கு வேலை இல்லை.''

இதைக் கேட்டதும் சங்கர்பந்தின் நிதானம் அடியோடு காற்றில் பறக்கவே, ''ராணிக்குத்தான் வேலை இருக்கிறதோ?'' என்று கேட்டுக் கதவைக் காலால் உதைத்தார்.

அதை அடுத்து உள்ளே அனந்தின் முனகல் கேட்டது. சிறிது தள்ளாடி அவன் எழுந்திருக்கும் ஒலியும் கேட்டது. அப்படி எழுந்திருந்ததால் கீழே போடப்பட்டிருந்த ஒரு பாயை சற்றே நகரும் சப்தமும் கேட்டது. இந்த ஒலிகளை யெல்லாம் தமது சந்தேகத்தின் அத்தாட்சிகளாக ஏற்று இடையிலிருந்த கைத் துப்பாக்கியையும் கையில் எடுத்துக் கொண்டார் மால்வான் தளபதி. அந்தச்



சமயத்தில் மெள்ள கதவு திறக்கப்பட்டது. கலைந்த குழலுடனும், சற்றே கிழிந்த சட்டையுடனும், தளர்ந்த நிஜாருடனும் தலையை வெளியே நீட்டினான் அனந்த். அவன் கோலம் அவன் காம இச்சை பூர்த்தியானதற்கு அடையாளம் என்று முடிவு கட்டிய சங்கர்பந்த், "எங்கே அவன்?" என்று கேட்டுக் கொண்டு அனந்தை இடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தார்.

நுழைந்ததும் பிரமையடைந்து நின்றார். ராணி அங்கு இல்லை. அறை மூலையில் என்றுமில்லாத திருநாளாக அன்று ஒரு சிறு விளக்கு மட்டும் காட்சி யளித்தது. பாயும் ஒரு தலையணையும் தரையில் கிடந்தன. தலையணையை அடுத்து அனந்தின் இரு கைத் துப்பாக்கிகளும் நித்திரை செய்து கொண்டிருந்தன.

சங்கர்பந்த் இவ்விதம் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த சமயத்தில் தூக்கக் கலக்கத்தில் இருந்த அனந்த் மீண்டும் பாயில் படுத்துக் கொண்டான். தலையணையின் ஒரு பக்கத்தில் இருந்த இரு கைத் துப்பாக்கிகளையும் பிரித்து இரு பக்கத்திலும் வைத்துவிட்டு ஒருக்களித்துப் படுத்துக் கொண்டான். அரைவாசி கண்களையும் மூடிக் கொண்டான். துயில் வந்ததால் முழுவதும் மூட முயன்ற சமயத்தில் சங்கர் பந்தின் குரல் எழுந்தது "எங்கே அவன்?" என்று.

"தெரியாது" அரைத் தூக்கத்தில் வந்தது பதில்.

"நானே பார்த்தேன் அவனை" என்றார் பந்த்.

"இருந்தால் அழைத்துப் போகலாம்."

"என்னிடம் விளையாடுகிறாய்?"

"அந்தத் துர்ப்பாக்கிய நிலைக்கு நான் வரவில்லை. ராணியுடன் விளையாடினாலாவது பயனுண்டு."

"அவனை என்ன செய்தாய்?"

"தந்தை கேட்கும் கேள்வியல்ல இது. பதில் சொல்வதும் விபரீதம்" என்று அனந்த் புரண்டு படுத்துக் கொண்டான்.

சங்கர் பந்த் திகைத்தார் சிலவினாடிகள். அந்தச் சமயத்தில் மெள்ள அழைத்தான் அனந்த் தூங்கியபடி "தளபதி" என்று.

"என்ன?" அதட்டலுடன் வந்தது பந்தின் கேள்வி.

"கதவை மூடிவிடுங்கள். என்னுடன் படுத்துக் கொள்ளுங்கள்!"

"எதற்கு?"



"என்ன இருந்தாலும் கமலா முன் யோசனைக்காரிதான்"

"எதை வச்சுச் சொல்றே?"

"நாமெல்லாம் துணி துவைக்க நம்ம கணவன்மார்களை எவ்வளவு கெஞ்ச வேண்டியிருக்கு? அவ, சாமர்த்தியமா ஒரு லாண்டிரி வச்சிருக்கறவரையே கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டாளே!"

- ஜீ. நடராஜன்

"சங்கர் பந்த்!"

"என்ன?"

"உமது கேள்விகள் வரவர விபரீதமாகத் திரும்புகின்றன."

"என்ன விபரீதம்?" என்று கேட்டுக் கொண்டே அனந்தை அணுகினார். அணுகி அவன் உண்மையில் உறங்குகிறானா பாசாங்கு செய்கிறானா என்பதை அறியக் குனிந்து நோக்கினார். அனந்தின் கண்கள் நன்றாக மூடிக் கிடந்தன. அவன் சுவாசம் சீராக வந்து கொண்டிருந்தது. அமைதியான அவன் நித்திரை அவன் பேச்சை விட அவருக்கு எரிச்சலை அளித்ததால் பாயோடு அவனை வாரி எறியத் திட்டமிட்டுப் பாயின் ஒரு புறத்தை எடுத்தார்.

"பாயைத் தொட வேண்டாம்" அனந்தின் எச்சரிக்கைக் குரல் மெதுவாக ஒலித்தாலும் அதில் பரம பயங்கரம் ஒலித்தது. அதே சமயத்தில் வெளியே யாரோ வரும் சத்தம் கேட்கவே சட்டென்று கைத்துப்பாக்கியை எடுத்துக் குறி வைத்துக் கொண்டு குதிரையையும் இழுத்துச் சுடத் தயாராக வெகு வேகமாகத் திரும்பினார் பந்த்.

அவர் கண்களுக்கெதிரே ஜில்வரின் இடுப்பிலிருந்த பல கைத்துப்பாக்கிகளில் இரண்டு பயங்கரமாக விழித்துக் கொண்டிருந்தன. "உன் கைத்துப்பாக்கியை அகற்று" என்ற உத்தரவும் ஜில்வரிடமிருந்து வந்தது.





## சேத்தியைப் பற்றிய சில சேதிகள்

மத்திய அமைச்சர் பி. ஸி. சேத்தி குஷியான மனிதர்! அவருக்கு உற்சாகம் வந்துவிட்டால் ராஜ்நாராயணனைத் தூக்கி அடிக்கும் காரியங்கள் செய்வார்.

முன்பு ஒரு நாள் சேத்தி டில்லியிலிருந்து போபால் நிலையத்தில் வந்து இறங்கினார்.

ஆங்கிலேய பாணியில் கோட்டு சூட்டு, வாயில் சுருட்டு, ஒரு கையில் குடை, மற்றொரு கை இடுக்கில் சிறிய தடி. அந்தக் கொட்டும் மழையிலும் திறந்த ஜீப்பில் தான் நகருக்குள் போக வேண்டும் என்று தம் அபிமானிகளிடம் சொல்லிவிட்டார். அடிக்கடி ஜீப்பில் நின்று கொண்டு "சுருட்டுடன் என்னைப் பார்க்கும் போது சர்ச்சிலாக என்னை நினைத்துக் கொள்ளுங்கள். குடையுடன் பார்க்கும்போது என்னை சேம்பர் லின்னாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். கைத்தடியுடன் பார்க்கும் போது நேருஜியாக நினைத்துக் கொள்ளுங்கள்" என்று முழங்கினார்.

மத்தியப் பிரதேசத்தின் முதல்வராக இருந்த போது போபாலிலுள்ள ஒரு நீச்சல் குளத்திற்கு இவர் பெயரைச் சூட்டியிருக்கிறார்கள். அந்தக் குளம் தினசரி காலை வேளையில் இரண்டு மணி நேரம் பெண்களுக்கு என்று பிரத்தியேகமாக ஒதுக்கப்படுகிறது.

சேத்தி, பெண்களுக்கான நேரத்தில் வந்து குபீரென்று குளத்தில் பாய்ந்து நீச்சலடிக்க ஆரம்பித்தார். பெண்மணிகளெல்லாம் ஓடி மறைய வேண்டியதாயிற்று.

எமர்ஜென்ஸி காலத்தில் நடந்த மற்றொரு நிகழ்ச்சி. விமானத்தில் சேத்தி குவாலியரிலிருந்து டில்லிக்குப் பயணம் செய்து கொண்டிருந்தார்.

விமானப் பணிப்பெண்ணை அழைப்பதற்கான மணியை அழுத்தினார். பணிப்பெண் வருவதற்குச் சற்றுத் தாமதமாகி விட்டது. சேத்திக்கு மகா கோபம். அந்தப் பெண்ணை மிரட்டித் திட்டித் தீர்த்தார்.

பின் வரிசையில் அமர்ந்திருந்த ஒரு பிரயாணி "இப்படியா ஒரு பெண்ணிடம் கண்ணியமில்லாமல் பேசுவது?" என்று கேட்டு வைத்தார்.

அவ்வளவுதான்! சேத்தியின் கோபம் திசை திரும்பியது. விடுவிடு என்று விமானம் ஓட்டுபவரின் காபினுக்குள் நுழைந்தார். அங்கிருந்து டில்லி ஏர் போர்ட்டிற்கு, போலீசைத் தயாராக இருக்கும்படி செய்தி அனுப்பினார். "ஒரு பிரபல கடத்தல்காரப் பேர்வழி இந்த விமானத்தில் பிரயாணம் செய்கிறான்" என்றார்.

அவர் உத்தரவுக் கிணங்க போலீஸும் தயாராக இருந்தது. ஆனால் அந்தப் பிரயாணி மத்திய அரசில் ஓர் உயர் அதிகாரி என உணர்ந்த போலீஸார் அவசரப்பட்டு ஏதும் செய்து விடவில்லை.

(ஆதாரம் : சண்டே)

-பே. ரு

அவன் சொன்னதைத் தொடர்ந்து அவனுக்குப் பின்னால் நின்றிருந்த இங்கலண்டும் கூறினான் "பந்த்! ஸில்வர் சொன்னபடி செய்யுங்கள்" என்று. அவன் கையிலும் ஒரு துப்பாக்கி இருந்தது. துப்பாக்கியை அவன் வெகு அலட்சியமாகப் பிடித்திருந்தாலும் அது உபயோகத்துக்குத் தயாராயிருப்பதை உணர்ந்து கொண்ட சங்கர்பந்த் தமது கைத் துப்பாக்கியை இடைக் கச்சையில் சொருகிக் கொண்டார்.

"தேர் ஈஸ் எ குட் பாய்" என்று பந்தைப் பாராட்டிய ஸில்வர், "கமாண்டர் டார்லிங் டு யூ மைண்ட் வேகிங் அப் தட் பெலோ (தளபதிக் கண்மணியே அதோ தூங்குபவனையும் எழுப்ப ஆட்சேபணையில்லையே)" என்று கொஞ்சிக் கேட்டான்.

"தூங்குபவரை நான் எழுப்பும் வழக்கம் இல்லை" என்று பச்சைப் பொய்யைச் சொன்னார் பந்த்.

இதைக் கேட்டதும் ஸில்வர் "ஹா! ஹா" என்று பெரிதாக நகைத்து "உன் பெண் எங்கே இவனுடன் இங்கு இருந்தவள்? கதவை யார் திறந்தது உனக்கு? அனந்தானே? அனந்தையும் நாங்கள் கவனித்துக்கொண்டு தான் இருந்தோம். ஆகையால் எங்கள் கண்களில் மண்ணைத் தூவப் பார்க்காதே" என்ற ஸில்வர் தனது ஒரு கையிலிருந்த கைத் துப்பாக்கியைப் பெல்டில் சொருகிக்கொண்டு அந்தக் கையால் தன் தோளில் இருந்த அசுரக் கிளியை எடுக்கப் போனான்.

அதே சமயத்தில் அரைத் தூக்கத்திலிருந்த அனந்தின் கைத்துப்பாக்கியொன்று வெகு துரிதமாக இயங்கி ஸில்வரின் வலது கையிலிருந்த துப்பாக்கியை மட்டுமின்றி இங்கலண்டின் கையில் இருந்த துப்பாக்கியையும் பறித்துச் சென்றது. "ஒன் மோர் ஸ்டுபிடிடீ இன் தட் பார்ட் (இன்னொரு முறை முட்டாள் தனத்தைக் காட்டு, அந்தக் கிளியைக் கொன்றுவிடுகிறேன்)" என்ற எச்சரிக்கையும் அனந்திடமிருந்து வந்தது.

ஸில்வர் அனந்தை நோக்கினான் சினத்துடன். அனந்த் கண்களை அரைவாசி மூடி, கையில் புகைந்து கொண்டிருந்த துப்பாக்கியை அரையும் குறையுமாகப் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் ஒருக்களித்துப் படுத்திருந்த கோலமும், தலையணை மீதுஒரு புறம் திரும்பியிருந்த முகத்தின் தோரணையும், இமைரெப்பை பனிச்சிட்ட கண்களும் ஏதோ சிறுத்தையொன்று பாயத் தயாராயிருக்கும் நிலையை நினைவூட்டவே "அனந்த் யூ ஃபூல் யூ வோண்ட் கெட் அவே வித் திஸ் (அனந்த் முட்டாள் இத்துடன் நீ தப்ப முடியாது)" என்று கூறினான் ஸில்வர்.

"ஸில்வர்! யூ ஆர் ரைட், ஐ வில் கில் திஸ் பெலோ (ஸில்வர் நீ சொன்னது முற்றும் சரி. இவனை நான் ஒழித்து விடுகிறேன்)" என்று கூறிக் கொண்டே மற்றொரு பக்கத்திலிருந்து வெளிவந்த டெய்வர் தனது இரு கைகளிலுமிருந்த இரு கைத்துப்பாக்கிகளையும் அனந்தை நோக்கிக் குறி வைத்தான். குதிரையையும் "கிளிக்" என்று இழுத்தான். அனந்த் தொலைந்தானென்று எல்லோருமே முடிவு கட்டினார்கள். (தொடரும்)

# சொல்லிக் கொடுக்காத நடிப்பு!

சிதம்பரம் ராஜகோபாலன்

**டை**ரக்டர் திலக் தனது ஆசனத்தில் வந்து அமர்ந்தான்.

சரியாக ஒன்பது மணிக்கு ஷூட்டிங் ஆரம்பம் என்று பலமுறை சொல்லியிருந்தும் அவள் வரவில்லை. பலமுறை போன் செய்தும் பதில் இல்லை.

''உமா!....உமா!....''

முதல் படத்தில் அறிமுகப்படுத்திப் பொது மக்களால் பாராட்டப் பெற்றதும் தொடர்ந்து தனது படங்களில் ஒப்பந்தம் செய்தான்.

'நீரில் அழும் மீன்கள்' என்ற படம் எதிர்பாராத வெற்றியைக் கொடுத்துப் பல மொழிகளில் எடுக்கத் தயாரிப்பாளர்கள் மொய்த்தனர்.

அந்த அளவுக்கு உயர்ந்துவிட்ட திலக் சாதாரணமாகவே தோற்றமளித்தான். ஆணவம் இல்லை. புகழின் செருக்கு இல்லை.

''சார்... சோடா....'' என்று உதவியாளர் நீட்டிய சோடாவை வாங்கிக் குடித்தான். தன் யூனிட்டைச் சேர்ந்தவர்கள் சூழ்ந்திருப்பதை உணர்ந்து கொண்டான்.

உதவி இயக்குனரைக் கூப்பிட்டான்.

''ராஜு... க்ளைமாக்ஸ் சீன் உமா வராததினாலே கான்சல் செய்துடுங்க... சம்பந்தப்பட்டவங்களுக்கு இன்னிய சம்பளத்தை வாங்கிக் கொடுத்திடுங்க... காமெடி ரோலை மட்டும் நான் சொன்னது போல் ஷூட் பண்ணுங்க... நைட் போன் பண்ணி மற்றதைப் பேசிக்கலாம்.... வீட்டுக்குப் போகிறேன்....''

''உபேந்திரன்!''

காமிராமேன் உபேந்திரன் ஏதோ வேலையாக இருந்தான். கூப்பிட்டதும் எதிர்பார்த்தது போல் பக்கத்தில் வந்து நின்றான்.

''வேலையை முடிச்சுட்டு வீட்டுக்கு வாங்க... கொஞ்சம் டிஸ்கஸ் பண்ண வேண்டியிருக்கு'' என்றான்.

''எஸ் ஸார்....'' என்ற உபேந்திரன் வேலையைக் கவனிக்கச் சென்றான்.

''உமா!....உமா! ...''

வண்டி வீட்டை நோக்கிப் புறப்பட்டது.

**பி**ன் சீட்டில் கவலையோடு சாய்ந்திருந்தான்.

''உமா!... எந்த நிலையில் நடிக்க வந்தே... ஞாபகப்படுத்திப் பார்... இஃப் யூ ஃபாலோ மீ.... யூ கேன் ஷைன் மோர்! சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிடாதே....பட்டம் உயர உயரப் பறந்தாலும் கீழே இருக்கிறவன் கண்ட்ரோல் இருந்தால்தான் — பிடிப்பு இருக்கும்... நூல் அறுந்து போன பட்டத்தின் கதி?...ஓ!''

''சார்....'' என்று டிரைவர் குரல் கொடுத்து அவனை நினைவுக்குக் கொண்டு வந்தான். இறங்கினவன் நேராக மாடிக்குப் போய்விட்டான்!

ஆடும் நாற்காலியில் உட்கார்ந்தவாறு சிந்தனையில் மூழ்கியிருந்தான்.

''அடேடே... எப்ப வந்தீங்க? வந்ததாகவே சொல்லலியே.... ஷூட்டிங் இல்லையா...இவ்வளவு சீக்கிரமா திரும்பிட்டீங்க?.... என்ன நடந்தது?'' என்று கேட்டவாறு உள்ளே நுழைந்தாள் மோகனா.

பெயருக்கு ஏற்றமாதிரி மோகனமாகவே தோன்றினாள். சாதாரண கைத்தறிப் புடவை அவள் மேனியைப் பல வண்ணங்களில் படம் பிடித்துக் காட்டிற்று. நல்ல வகிடும், வகிட்டின் மேல் பளீரென்று மஞ்சள், குங்குமப் பொட்டும், இரு புறத்திலும் சுழற் கற்றைகள் காற்றில் அசைந்தாட — அழகே அசைந்தாட வந்து பக்கத்தில் நின்றாள்.

படாடோபமில்லா விட்டாலும் பளிச்சிடும் அழகு முன் வந்து நிற்கிறதே....!

''கேக்கறேன்... பதிலையே காணோம்.... தலை வலியா? இதோ காப்பி கொண்டு வருகிறேன்'' என்றவள் கீழே இறங்கிப் போனாள்.

செட்டில் புது முகத்துக்கு ஏற்படும் கலக்கம், பயம் திலக்கா? ஏன் இப்படி? அவனுடைய உடை கொஞ்சம் கொஞ்சமாய் வியர்வையில் நனைந்து கொண்டிருந்தது.





''ம்.... குடிங்க.... ஏகப்பட்ட செலவில்பெரிய செட் போட்டிருப்பதாய்ச் சொன்னீங்க....என்னங்க ஆச்சு?''

மோகனா மீண்டும் கேட்டான்.

''உமா!.... உமா!....'' தன்னைச் சுற்றி நூறு பேர் நின்றுகொண்டு ஒரே சமயத்தில் அவள் பெயரைச் சொல்லிக் கத்துவது போல்.... தலையைப் பிடித்துக் கொண்டான். அமைதியாகச் சொன்னான்:

''உமா திடீரென்று ஷூட்டிங்குக்கு வராம இருந்துட்டா.... ஏகப்பட்ட நஷ்டம்!....''

''காரணமில்லாம உமா இப்படிச் செய்ய மாட்டாளே!...நல்ல நடிகை மட்டுமில்லே; நல்லவளுமாச்சே!''

''சர்ட்டன்லி.... ஆளு வராததற்குக் காரணம்.... காரணம்....''

''சொல்லுங்க''

''பிடிவாதக்காரி. லீவ் இட் மோகனா. உன்கிட்டே ஒப்பா ஒன்னு கேட்பேன்... பதில் சொல்லுவியா?'' என்ற இலக் அவள் முகத்தைக் கூர்ந்து நோக்கினான்.

''நான் நடிகையா என்ன? திடீரென்று எமோஷனை வெளிப்படுத்த?'' நடும்பா



பெண். என்னோட பதிலெல்லாம் காரிய காரணத்தோட இருக்கும்... ம்.... சொல்லுங்க.''

சுற்று முற்றும் பார்த்துக் கொண்டான்.

ஓட்டப் பந்தயத்தில் வெடிச் சப்தம் கேட்டதும் ஓடத் தயாராவது போல் ஒரு கணைப்புடன் பேச்சைத் துவங்கினான்.

''தப்பா நினைக்காதே மோகனா... நான் ஒருத்தியை விரும்பறேன்.... அவளும் என்னை விரும்பறா.... வித் யுவர் பர்மிஷன்... அவளைக் கல்யாணம் பண்ணிக்கலாம்னு நினைக்கிறேன். வில் யூ பர்மிட் மீ?''

''வெரி குட் ஜோக்!.... ஃபைன்!'' அவள் கலகலவென்று சிரித்தாள்.

''நாட் எ ஜோக்... நிஜம்தான் மோகனா! அவ ரொம்ப நல்லவ... நல்ல நிலையிலே இருக்கா... உன்னை மறந்துட்டு—உன்கிட்டே கிடைக்காத சுகத்துக்காக அவளை விரும்பலே—அவளே என்னை விரும்பி ஏத்துக்கணும்னு சொல்றப்போ - அனுதாபத்தோட இணையலாம்னு...''

மோகனாவின் கண்கள் அருவியாகக் கொட்டிக் கொண்டிருந்தன.

''அழாம பதில் சொல் மோகனா....''

''டைரக்டர்னு படத்தில் அறிமுகப்படுத்தறவளை யெல்லாம் பண்ணிக்கலாமா?''

''நோ...நோ... அது முறையா?''

''அப்படின்னா இது மட்டும் முறையா?''

''இது....இது...அவளேவிரும்பறதாலே.''

''பிறர் விருப்பத்துக்கெல்லாம் இணங்கிறது தியாகமாயிடுமா? பச்சை சுயநலத்தை வேற போர்வை போட்டு மூடாதீங்க.

'''ஒருவனுக்கு ஒருத்தி' படம் எடுத்தீங்களே... ஓகோன்னு ஓடிச்சே... மத்தவங்களுக்கு மட்டும் அட்வைசா? இதோ பாருங்க இந்த பிசினெஸெல்லாம் எனக்குப் பிடிக்காது. என்னை ஊர்ல கொண்டு போய் விட்டுட்டு உங்க நாடகத்தை நடத்துங்க..''

''இப்ப சங்கடமாப் பட்டாலும் 'இன் ட்யூ கோர்ஸ்.. சரியாப்போயிடும் மோகனா.''

''என் பேரைச் சொல்லாதீங்க. என்னை மறந்துடுங்க. ஊர் புகழும் டைரக்டராம்! உங்க ஊழல் உலகத்துக்குத் தெரியாமல் போகலாம். என் மனசாட்சி ஒத்துக்காது. என்னை விடுங்க. நான் போறேன்....'' மோகனா பெரிதாக அழுதுகொண்டு திலக்கின் பிடியிலிருந்து தப்பிக் கீழே ஓடினாள்.

டைரக்டர் திலக் முழுமையாய் நனைந்திருந்தான். திரையை விலக்கிக் கொண்டு ஓடி வந்து திலக்கின் காலில் விழுந்தான் கேமராமேன் உபேந்திரன்.

''வாட் ஈஸ் திஸ்.. ஐ டோண்ட் லைக் இட். கெட் அப்... கெட் அப்...'' என்ற திலக் பரபரப்போடு அவனைத் தூக்கினான்.

''சார்... என்னை மன்னிச்சுருங்க சார்... எனக்குப் பாடம் புகட்டணும்னு எப்படிப்பட்ட கடுமையான தண்டனையை அண்ணிக்குக் கொடுத்திட்டீங்க! இதையெல்லாம் மறைந்திருந்து என்னாலே கேட்டுக்க முடியலே... சத்தியமா நான் உமாவை மறந்துட்டேன் சார்.... அவ வாழ்க்கையில் இனி குறுக்கிட மாட்டேன். இதை நம்புங்க... இன்னிக்கு உமா ஷூட்டிங் வராததுக்குக் காரணம் நான்தான். ரெண்டு பேரும் சேர்ந்து பெங்களூர் போகத் திட்டம் போட்டிருந்தோம். ஆனா...ஆனா...''

''என்னாலே காரியமே கெட்டுப்போச்சு... அப்படித்தானே?''

''தயவு செய்து அப்படிச் சொல்லாதீங்க சார்.... இப்படித் தன்னை வருத்திக்கிட்டுப் பிறருக்குப் பாடம் புகட்டணும்னு யாருக்கு அக்கறை?''

''உன் மனைவி எனக்கு போன் பண்ணி விஷயத்தைச் சொல்லலேன்னா உமா ஏன் வரலேன்னு குழம்பிப் போயிருப்பேன். சரி...சரி. இனிமே நான் சொல்ல வேண்டியது எதுவும் இல்லேன்னு நினைக்கிறேன்.'' திலக் ஒரு விநாடி நிறுத்திவிட்டு உபேந்திரனை நோக்கினான்.

ஒரு வெற்றிப் பட டைரக்டரின் போக்கு புரியாமலா இருக்கும் அவனுக்கு?

''சார்... இனி உபேந்திரன் உங்ககிட்டே பணிபுரியும் நல்ல, ஒழுக்கமுள்ள கேமராமேன்... இதை நம்புங்க சார்.''

''வெல்! நேரே வீட்டுக்குப் போய் உன் மனைவியைச் சமாதானம் செய்து ரெண்டு பேருமா எனக்கு போன் பண்ணணும். அது வரை இந்த இடத்தை விட்டு அசைய மாட்டேன். தெரிஞ்சுதா?''

''தாங்க்யூ சார்'' உபேந்திரன் நன்றிப் பெருக்குடன் புறப்பட்டான்.

ஒரு மணி நேரத்துக்குப் பிறகு...

தனது முயற்சியில் வெற்றி கண்டவனாய் மகிழ்ச்சியோடு கீழே இறங்கினான் திலக்.

''மோகனா... என் மேல் கோபமா? காமராமேன் உபேந்திரன் பாதை தவறிப் போய் உமா வாழ்க்கையையும் கெடுத்து, தன் மனைவியையும் வேதனைக்கு ஆளாக்குறான்னு தெரிஞ்சு ஒரு ரியல் ரிப்ளக்ஷன் ஷாட்டைக் காண்பிக்க இப்படி நான் நடிக்கும்படி நேர்ந்தது. என்னோட முடிவைக் கேட்டு அதிர்ந்து போய் என்னமா துடிக்கப் போயிட்டே!... அதுதான் சொல்லிக் கொடுக்காத நடிப்பு... நீ ஜெயிச்சுட்டே மோகனா. அவனும் காலில் விழுந்து சரண்டர் ஆயிட்டான். ஆயுளுக்கும் இனிமே தப்பே செய்ய மாட்டான். உன்னை விட்டா எனக்கு உலகமே இல்லே மோகனா...''

அவன் அவளை மகிழ்ச்சி பொங்க அள்ளினான்....

வாயிலும் மூக்கிலும் நுரைக்க, உடலெங்கும் வர்ண ஜாலங்கள் வியாபித்திருக்க....

''மோகனா...'' டைரக்டர் திலக்கின் கதறல் அறையை, வீட்டை, தெருவைக் கடந்து காற்றில் கலந்தது.

ஒரு நாள்
என் மகன்
என்ஜினீயர்
ஆவான்

## அந்த ஒரு நாள் இன்றே தொடங்கட்டும்
## ஸ்டேட் பாங்குக்கு இப்போதே விஜயம் செய்யுங்கள்.

ஒவ்வொரு பெற்றோரும் கனவு காண்பது தங்கள் அருமைக் குழந்தையின் வளமான வருங்காலத்தைப் பற்றித்தான். ஆனால் காலம் எவ்வளவு வேகமாகப் பறக்கிறது. நாளை என்பது எவ்வளவு சீக்கிரம் வந்து விடுகிறது என்பது பற்றி எந்தப் பெற்றோரும் நினைத்துப் பார்ப்பதில்லை. தொலை நோக்கும் திட்டமும் இல்லாத காரணத்தால் நமது கனவுகள் பெரும்பாலும் தூள்தூளாக சிதறி விடுகின்றன.

ஸ்டேட் பாங்கில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கனவும் நிறைவேற உதவும் திட்டங்கள் எங்களிடம் உள்ளன.

சேவிங்ஸ் அக்கவுண்ட் (சேமிப்புக் கணக்கு), ஃபிக்ஸெட் டெபாசிட் (நிலையான டெபாசிட்), ரெக்கரிங் டெபாசிட் (தொடர் வைப்பு நிதித் திட்டம்). ரீஇன்வெஸ்ட்மெண்ட் பிளான் (மறு முதலீட்டுத் திட்டம்) பெரெனியல் பென்ஷன் பிளான் (நிரந்தரப் பென்ஷன் திட்டம்). ஜனதா டெபாசிட் மற்றும் மைனர்ஸ் அக்கவுண்ட்.

மற்ற விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஸ்டேட் பாங்க் அலுவலகத்திற்கு விஜயம் செய்யுங்கள்.

சேமிப்பதற்கு ஸ்டேட் பாங்க், 5200க்கும் மேலான அலுவலகங்கள் கொண்ட இந்தியாவின் மிகப் பெரிய பாங்க்.



**ஸ்டேட் பாங்க்**

CHAITRA-SBI-626 TAM



Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள் !** **மணமானவர்கள் !!**

வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,
தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,
இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'
ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'

## 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

❋ **குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்**
❋ **கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்**

சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

மாதாந்திர சுற்றுப் பயண விவரம்: ஒவ்வொரு ஆங்கில தேதிகளிலும்

### பிரதம வைத்தியர் தங்குமிடங்கள் :

சென்னை-600002, 1 முதல் 6ந் 7தேதி வரை: ராமச்சந்திரா லாட்ஜ், போன்: 846526. 6 அத்திப்பட்டன் தெரு, அண்ணாசாலை சமீபம். P ORR. & Sons – பெட்ரோல் பங்க் பின்புறம் ரோடு. காலை 7 மணி முதல் இரவு 7 மணி வரை.

சேலம் தலைமை அலுவலகம்: , 11, 16, 17 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள்.

திருச்சி: 9, 10 தேதி: அசோக் பவன், ஜங்ஷன் ரோடு. போன்: 25783. காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கோவை: 12, 13ந் தேதி. ஸ்ரீ லக்ஷ்மி லாட்ஜ், ராஜ வீதி, போன்: 33330.

பொள்ளாச்சி 14ந் தேதி: மாடர்ன் லாட்ஜ், தாலுகா ஆபீஸ் எதிர் சந்து, காலை 8 மணி முதல் 12 மணி வரை.

திருப்பூர் 14ந் தேதி: ராமகிருஷ்ணா லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. மாலை 3 மணி முதல் 5 மணிவரை.

ஈரோடு 15ந் தேதி: ஆனந்த் லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

மதுரை 21, 22 தேதி: மணீஸ் கேப். (டவுன் ஹால் ரோடு) போன்: 22019. காலை மணி முதல் இரவு 7 மணி வரை.

அருப்புக்கோட்டை 23ந் தேதி: ராதா லாட்ஜ், ஜி. வி. ரோடு, காலை 9 மணி முதல் பகல் 12 மணி வரை.

திருநெல்வேலி: 23, 24ந் தேதி: நெல்லை லாட்ஜ், காலை 7 மணி முதல் இரவு 8 வரை.

மதுரை 26ந் தேதி: மணீஸ் கேப், டவுன் ஹால் ரோடு, போன்: 22019. காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரை.

திண்டுக்கல் 26ந் தேதி: ஆரியபவன் லாட்ஜ் பழனி ரோடு. மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரை.

### உதவி வைத்தியர் தங்குமிடங்கள் :

விழுப்புரம் 3ந் தேதி: வாசவி விஹார் ஹோட்டல், எம். ஜி. ரோடு. காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கடலூர் என்.டி. 3ந் தேதி: ஹோட்டல் பிருந்தாவன். மாலை 3 மணி முதல் இரவு 8 மணி வரை.

சிதம்பரம் 4ந் தேதி: ஜெயராம் லாட்ஜ், (மேல வீதி) காலை 7 மணி முதல் பகல் 3 மணி வரை.

கும்பகோணம் 5ந் தேதி: தாஜ்மஹால் லாட்ஜ் பொற்றாமரைக் குளம் (போன்: 1423) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

தஞ்சாவூர் 6ந் தேதி: அசோகா லாட்ஜ், (ராஜா கலை அரங்கம்) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கம்பம் 21ந் தேதி: யூனிவர்சல் லாட்ஜ், காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.

தேனி 21ந் தேதி: பாண்டியன் லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

விருதுநகர் 23ந் தேதி: ஹோட்டல் ஆஞ்சநேயா. காலை 7 மணி முதல் 12 மணி வரை.

இராஜபாளையம் 23ந் தேதி: அசோகா லாட்ஜ். மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

நாகர்கோவில் 24ந் தேதி: உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பவன், போஸ்டாபீஸ் ஜங்ஷன் ரோடு, காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

தென்காசி 25ந் தேதி: பார்வதி லாட்ஜ். காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கோவில்பட்டி: 25ந் தேதி சரஸ்வதி லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

**தலைமை அலுவலகம் :**

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

**C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்**
(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)
**காந்தி ஸ்டேடியம் – சேலம்-636007**

"என் அம்மாதான் பெரிதாக 'புஷ்பத்'தில் கொடு. பாவம்.... நமக்குப் பொருள் கிடைக்கிறது. பல ஏழைப் பெண்களுக்குத் தொழில் கிடைக்கிறது என்று ஃபிலாசஃபி பேசிக் கெடுத்துவிட்டாள். அந்த ஜோதி ஹாலில் செய்தது எவ்வளவு நன்றாக இருக்கிறது'' என்றாள் புஷ்பாவின் கடைக்குப் பொருள் வாங்க வந்த பெண்.

ஒரு நிமிஷம் 'சுருக்'கென்றது புஷ்பாவுக்கு. ஜோதி....ஜோதி! சே... எவன்தான் இந்தப் பாவியைக் கூப்பிட்டுக் கடைவைக்க இடம் கொடுத்தானோ... புஷ்பாவுக்கு எரிச்சலாக இருந்தது. ஒரு வருடமாக விளக்குப் போடுபவன் அவளது மூன்று வருட அனுபவத்தை எப்படிக் கவிழ்த்து விட்டான்... அவன் வந்து கடை விரித்த அன்று அவன் நினைத்ததென்ன.... நடப்பதென்ன?

அன்று....

• • •

எதிர்க்கடை வாசலில் வாரி வந்து நிற்பது கண்டு திகைத்து நின்றாள் புஷ்பா. ஏன் அங்கு வரப்போகும் அப்பாவி மேல் அனுதாபம் கூட ஏற்பட்டது. ஏனெனில் 'அந்த இடத்திற்கு அத்தனை ராசி! எவரும் மூன்று மாதங்களுக்கு மேல் அங்கு நிலைத்ததில்லை. பாவம். இந்த அடுத்த 'பலி' யாரோ! அவள் சஸ்பென்ஸை தீர்த்தபடி கல்லாப் பெட்டியில் அமர்ந்தான் அவ்விளைஞன். கடை வாசலில் போடப்பட்ட பெயர்ப்பலகை, வண்ணச் சீலைகள், வகைவகையான விளம்பரங்கள்... எல்லாமே அங்கு 'ஊசிமுதல் பியானோ' வரை என்பார்களே அப்படி அடக்கம் என்று காட்டியது. முதலில் அவனது விளம்பர இரசனையை வியந்து கூட நின்றாள் புஷ்பா.

''பார்த்தாயா, அம்மா... எதிர்க்கடைப் பையன் சக்கைப் போடு போடுகிறான். நீ ஒரு நாள் மூடிவிட்டுப் போக வேண்டியதுதான் போல இருக்கிறதே!'' ஒரு நாள் பழம் பெரும் வாடிக்கைகாரர் ஒருவர் சொன்னபடி வந்தார், அவர் கையில் எதிர்க்கடையில் வாங்கிய குழந்தைகள் காரம்போர்டு, பெண்கள் உள் பாவாடை இன்னும் ஏதேதோ!

''என்ன ஸார், நீங்கள் கூட அப்படிச் சொல்கிறீர்கள்? என் கடை விளம்பரம், வியாபாரம், ஆதாய விரயக் கணக்கிலா ஆரம்பிக்கப்பட்டது? உங்களுக்குத் தெரியாதா?''

''அட போம்மா, 'கஷ்டப்படுகிற பெண்களுக்கு வேலை தரலாம், கைத்தொழில் வளர்க்கலாம்' என்று சொல்லிக் கடை ஆரம்பித்தாய். நிஜம்தான். ஆனால் அந்தக் கடையில் பாரேன்! ஆள் பாதி ஆடை பாதி என்பார்கள். இப்போது விளம்பரம் பாதி. பொருள் பாதிதான் காலம்! சாமான்களை எடுத்துப் போடுகிற கைகளைப் பார் அங்கே. அவங்க பேச்சும் சிரிப்பும் நம்ம பர்ஸை அப்படியே அபேஸ் பண்ணிடுவாங்களே!'' அவர் கண்கள் இங்கு உட்கார்ந்து கொண்டிருக்கிற பெண்களையும் வியாபாரம் செய்யும் 'மெனிக்யூன்' பருவங்களையும் காட்டுப் பூனையைப் பார்ப்பது போலப் பார்த்தன.

# காந்தத்துக்குத் தேவை புஷ்பம் அல்ல!

ஸ்ரீப்ரியா



புஷ்பாவின் பொறுமைக்கு இது சோதனையாக இருந்தது.

''நீ பெண் பிள்ளை. எத்தனை நாட்கள் கடையைக் கட்டிக் கொண்டிருக்கப் போகிறாய்? கடையை வந்த லாபத்தில் விற்றுவிட்டுக் கல்யாணம் பண்ணிக் கொண்டு குடித்தனம் பண்ணப் போய்ச் சேர். ஏன், நாளையே நாம் ஒரு வார்த்தை சொன்னால் உடனே வாங்க அந்தப் பிள்ளை ஜோதியே தயாராய் இருப்பான். ஏனெனில் அவனுக்கு நீ ஒருத்திதான் சமமான 'போட்டி' இங்கே ''

புஷ்பாவுக்கு முகம் சிவந்தது. கல்யாணப் பேச்சைக் கேட்டோ, அவ்வாலிபனின் நாமம் கேட்டோ அல்ல. ஆத்திரத்தில் அவள் இதழ்கள் துடித்தன. ''ஸார், உங்கள் அறிவுரைக்கு நன்றி. தேவையானால் சொல்லி அனுப்புகிறேன். தரகர் வேலை இருவர் நடுவிலும் செய்ய'' வெடுக்கென்று அவள் சொன்னது கேட்டு, வந்தவர் சின்னச் சிரிப்புடன் வெளியேறினார். ஆனாலும் என்ன? வருடம் ஒன்றுக்குமேல் ஆகியும் அந்த இடத்தின் 'துக்கிரி' ராசி அவளை ஒன்றும் செய்யவில்லையே? மாறாக, கிரகம் பெயர்ந்து ஜோதியை ஒளிவீசச் செய்து புஷ்பத்தை வாட வைத்துவிடும்போல் இருக்கிறதே!

• • •

அன்று 'ஜோதி'க்கு ஒரு மந்திரி வந்தார். பல காமிராக்கள் 'கிளிக்'கின. மாடியில் ஒரு டிபார்ட்மெண்டல் ஸ்டோர் திறப்பு விழா. இன்னும் நாலு பெண்கள் அங்கு அதிகப்படியாகக் குலுக்கி மினுக்கினர். பிஸினஸ் மாக்னெட், ஜோதிப்ரசாத் பெரிய புள்ளி ஆகிவிட்டான்.

பெண்களை வைத்து, பெண்கள் அழகைப் பொம்மையிலும் நேரிலும் விளம்பரப்படுத்தி, விற்கும் ஜோதி பெரிய பிஸினஸ் புள்ளி.

வாடும் பெண்களுக்கு வழி வகுக்க, வயிறு வளர்க்க வழி செய்து நேர்மையாக வியாபாரம் செய்யும் ஒரு பெண் கடையை மூட வேண்டிய நிலையில் இருந்தாள்.

''போன வாரம் இன்கம்டாக்ஸ்காரங்களுக்குப் பார்ட்டியாம். இந்தக் குட்டிங்களாம் ரிசப்ஷன் சர்வீஸ்....'' என்றாள் புஷ்பாவின் தோழி லட்சுமி.

''போதும் லட்சுமி, குமட்டுகிறது. 'ஐயோ பாவம். இந்த இடத்துக்கு வருகிறானே' என்று இரக்கப்பட்டேன், அப்போது..... ஆனால் இப்போது அவனுக்கு இல்லை ஆபத்து என்று புரிகிறது. அவன் கடையிலே வர சில பெண்களைத் தான் ஐந்தாறு மாதத்தில் காண முடிவதில்லை. எவனோடு ஓடிப் போகிறதுகளோ என்னமோ? ஒட்டிக் கொண்டு இருக்கிறது களும்....சே....''

''அவன்தானம்மா வியாபாரம தெரிஞ்சவன். தொழில் புலி! வியாபாரத்துக்குத் தேவை முதல் — பணம். அந்தப் பணத்தால் வெளிச்சம் போட விளம்பரங்கள். அதற்குப் பதமாக பெண்கள். காசை விட்டெறிந்தால் எல்லாமே கடைச் சரக்காக முடியும். என்று காட்ட வேண்டிய கள்ள மனம் ''

புஷ்பா பதிலளிக்கவில்லை. அவளையுமறியாது அந்த ஆண் மகன் மீது ஓர் எரிச்சல். இவனை எப்படிக் கவிழ்ப்பது... ஜெயிப்பது? அவன் முன் 'போடா' என்று தலை நிமிர்ந்து நிற்க வேண்டும் என்ற ஓர் ஆதங்கம்.

அதே சமயம் உள் மனத்தில் தான் படித்த சில டெனிஸ், மில்ஸ் அண்டு பூன்களும் நிழலாடாமல் இல்லை. அந்தப் புத்தகங்களில்

# ◇ ஸ்ரீதேவி ◇

கதாநாயகியின் பெயர் ஸ்ரீதேவி. படத்துக்கு எப்படியும் ஒரு பெயர் வேண்டுமல்லவா? கதாநாயகியின் பெயரையே வைத்து விட்டார்கள். அவள் பெயரையே படத்தின் பெயராக வைக்கும் அளவுக்கு அவள் அப்படியொன்றும் பிரமாதமாகச் சாதித்து விடவில்லை. சரிதா, ஹீரோயின். அவ்வளவுதான். அப்பா நடத்தும் சாப்பாட்டு ஹோட்டலில் பரிமாறுகிறார். சாப்பிட வரும் ராஜகுமாரைக் காதலிக்கிறார். காதல் சில சங்கடங்களுக்குப் பிறகு திருமணத்தில் முடிகிறது.

கதாநாயகியின் தந்தையாக வரும் மணி ஐயர் மிக நன்றாக நடித்திருக்கிறார்.

கவுண்ட மணி — காந்திமதியின் காமெடி ரசிக்கும்படியாயில்லை.

படத்தின் முக்கிய நடிகர் ஒரு சிம்பான்ஸி குரங்கு.(ராமு). வயதாகி விட்டதால் அதனால் சுறுசுறுப்பாக இயங்க இயலவில்லை. பாவம், டைரக்டர், ராமுவோடு அரும்பாடு பட்டிருக்கிறார்.

ஸ்ரீதேவியின் தங்கை பிறவியிலேயே பார்வை இழந்தவள். அவள் குளத்தில் குளிக்கும்போது கரையில் இருந்த அவளது புடவையை எடுத்துச் சென்றுவிடுகிறான் ஒரு கயவன். கண் தெரியாமல், ஈரத் துணியால் சிறிது உடலை மறைக்க அவனுடன் அவள் போராடுகிறாள். இது மிகவும் வேதனையான காட்சி. எப்படியாவது ஒரு காட்சியை செக்ஸியாகப் புகுத்தி விட வேண்டும் என்பது படாதிபதியின் குறிக்கோள்! அதற்காக இப்படி வேண்டுமென்றே புகுத்துவது பெண் குலத்தை அவமானப்படுத்துவதாகும் என்று யார் யோசிக்கிறார்கள்? வேதனை.

இந்த வண்ணப் படத்தைப் பற்றி ஏதேனும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமென்றால் குறிப்பிட்டுச் சொல்லுகிற மாதிரி ஒன்றுமே இல்லை என்பதைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்!

–கார்த்தன்

முதலில் போட்டியும் பொருமையுமாகக் குறுக்கிடுபவன்தான் கடைசியில் காதலனாக முடிவான்.

• • •

"புஷ்பா!" — அன்று ரங்குடு மகிழ்ச்சியுடன் உள்ளே நுழைந்தார். "ஒரு நல்ல செய்தியம்மா. நம்ம கடைக்கு ஒரு நல்ல விலை வந்திருக்கு."

"என்னப்பா..... கடைக்கு விலையா? எதற்கு?" புஷ்பாவின் குரல் இடறியது.

"என்னம்மா நம்ம பிஸினெஸ்தான் 'டல்' ஆயிடுத்தாமே. தவிர எத்தனை நாள் நீ எடுத்து நடத்த முடியும்? வெளியிலே கல்யாணம் ஆகிப் போய்விட்டால் அப்புறம் ரொம்பக் கஷ்டமாகிவிடும். அதனாலே..."

"அதனாலே?"

"அந்தப் பையனே கடையை எடுத்துக்கறானும். இன்னும் என்னவோ 'எக்ஸ்பான்ஷன்' பண்ணப் போகிறானும். உங்க கிட்ட இருக்கும் பெண்களை அப்படியே எடுத்துக் கொள்கிறேன் என்கிறான்...."

"என் கடைப் பெண்களையா? அவனுக்கு அப்படிக் கூடத் தோன்றுகிறதா அவர்களைப் பார்த்தால்! ஆனால், அப்பா, எங்க கடைத் தொழிலாளிகள் அசல் பெண்களாயிற்றே! தொழிலை வணங்கும், பெண்மையைப் போற்றும், உயிர்த் துடிப்புடன் இருக்கும் பெண்கள்! இவர்கள் இவன் கடையில் இருப்பதைப் போல உயிரற்ற அலங்காரப் பொம்மைகள் அல்ல. இது தெரியுமா அவனுக்கு?"

"அட.. போம்மா... நீயும் உன் இடக்குப் பேச்சும்...."

"சரி, என்னையும் வேலைக்கு எடுத்துக்கொள்கிறானா?"

"உன்னை வேலைக்கா? ... அதுதானே சொல்ல வந்தேன்.... உன்னை எஜமானியாகவே ஆக்கிடறானும்.... அதாவது உன்னையும் பெண் கேட்கிறான் அம்மா. அவன்... இரட்டை லாபம் எனக்கு."

"என்னது?" புஷ்பா சீறிப் பாய்ந்தாள்.

"அப்பா, என்ன நினைத்தான் அந்தப் பயல்? அவனுக்குப் பெண்மை, பெண்மனம் என்றால் என்னவென்று தெரியுமா? எல்லாம் இயந்திரம் தானே அவனுக்கு? விளம்பரம், பணம் தானே அவனுக்கு முக்கியம்! என் உடல், உழைப்பு, உண்மை எதிலும் தூசி கூடக் கிடைக்காது அவனுக்கு. 'பெரிய பிஸினெஸ் மாக்னெட்' என்று விளக்குப் போடும் அவன் 'சாலக்கு' எதும் என் முன் பேரம் படியாது."

"என்னம்மா சொல்கிறாய் நீ?"

"அப்பா... ஒரு ஆண் மகன், மனிதன், பெண்ணை மரியாதை மதிப்போடு நடத்தத் தெரிந்தவன் எனக்கு வேண்டும். அவனும் அப்படி ஒருநாளும் இருக்க முடியாது. எனக்கு வேண்டியது ஆதரவு மிக்க கணவன்... ஆடம்பரம் மிக்க 'மாக்னெட்' அல்ல. தூ... கேட்டாலும் வந்து பெண்ணை.... இவரும் குதித்தாராம்...."

'டக் டக்'கென்று காலின் கீழ் அவனை, அவன் ஆண்மையை, அதன் அசிங்கமான ரசனையை, முன்னேற்றத்தை மிதிப்பது போல நடந்தாள் புஷ்பா. மாக்னெட்டுக்குத் தேவை இரும்பு. மிருதுவான புஷ்பம் அல்ல. "மிஸ்டர்.... உமது ஜாலம் இந்தப் பேரத்தில், இங்கு என்னிடம் செல்லாது.'

"லு வொன் தி கேம், மிஸ்டர். இப்போது எனது முறை...."

முதன் முறையாக புஷ்பாவின் மனம் எதிர்க் கடையை 'போடா...' என்பது போலத் தலை நிமிர்ந்து பார்த்துச் சிரித்தது. அவளுக்குத் திருப்தியாக இருந்தது.



### யுத்த கால முயற்சி தேவை

# ஜனப்பெருக்கத்துக்கு எதிரான போர்!

மே 25ந் தேதி கல்கி இதழில் ''படித்த முட்டாள்கள்'' என்ற கட்டுரையைப் பிரசுரித்ததன் மூலம் நீங்கள் அரிய தொண்டாற்றியுள்ளீர்கள். அதைத் தொடர்ந்து ஜூன் முதல் தேதி இதழில் வந்துள்ள நரகத்துக்குப் போய் என்ற கதை மிகவும் கருத்தாழம் உள்ளது.

நம் நாட்டைப் பிடித்த துரதிர்ஷ்டம் நாம் இரிசங்கு சொர்க்கத்தில் ஊசலாடுகிறோம். பழைய கலாச்சாரப் பிடிப்புகள் கலகலத்து வருகின்றன. புதிய வேடங்கள் அவைகளின் பலத்தைக் காட்டுகின்றன. மனக் கட்டுப்பாடு சினிமாக்கள் மண்டிய காலத்தில் சாத்தியம் இல்லை. மேலை நாடுகளில் ஏற்பட்ட விஞ்ஞான ரீதியான உத்திகளை நம் நாட்டில் கைப்பிடிக்கவில்லை.

அமெரிக்கா, ஐரோப்பாவில் கிறிஸ்துவ மதம் பரவியுள்ளது. அதனால் ஜனத்தொகை அதிகரிக்கவில்லை. அதாவது மதத்தைக் காரணமாகக் காட்டி ஜனத் தொகை இஷ்டப்படி அதிகரிக்க வேண்டும் என்று யாரும் கட்சி பேசவில்லை.

உண்மையில் இத்தாலியில் கத்தோலிக்க மதத்தினரின் தாயகத்தில், கருச் சிதைவு செய்ய உரிமை கோரிமாதர்கள் கிளர்ச்சி செய்கிறார்கள்.

✕ மேற்கு ஜெர்மனியிலும் இதர மேல்நாடுகளிலும் குழந்தை பிறக்கும் போது தகப்பனார் அருகிலிருந்து பார்க்கவேண்டும் என்ற கருத்து ஆண், பெண் இருவரிடையேயும் அதிகரித்து வருகிறது. இதனால் கணவனுக்கு மனைவியிடம் மதிப்பு வளர்கிறது. குழந்தையிடம் அன்பு அதிகரிக்கிறது.



**கே. ஸ்ரீனிவாசன்**

நாகரிகம் போகும் போக்கில் நார்வே, ஸ்வீடன் போன்ற நாடுகளில் பெண்மணிகள் பிள்ளை பெறத் தயாராக இல்லை. வியட்நாம், கொரியா போன்ற நாடுகளிலிருந்து குழந்தைகளைத் தருவித்துக் கொண்டு விடலாம் என்கிறார்கள். ஆசியப் பெண்கள் மட்டுமென்ன கறவை மாடுகளா?

இந்தியாவில் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு ஆரம்பத்திலிருந்தே அஷ்டமத்தில் சனி. கருத்தரிக்காத நாட்கள் கணக்கு லூப் மாத்திரை என்றெல்லாம் குழப்பியாகி விட்டது. இந்தியாவில் எந்த பிரிவுக்கு அதிகக் குழந்தைகளைப் பராமரிக்கச் சக்தி கிடையாதோ, அது தான் கணக்கற்ற குழந்தைகளை வைத்துக் கொண்டு மன்றாடுகிறது. அதிகக் குழந்தைகள் அதிக மீன் பிடிக்கும், அதிகம் மூட்டை தூக்கும், அதிகம் சித்தாள் வேலை செய்யும், குடும்ப வருவாய் அதிகரிக்கும் என்பதெல்லாம் அறியாமை. எம்மதத்தவரானாலும் சரி, இரண்டு குழந்தைகளுக்குப் பிறகு, வேண்டும் என்றால் மாற்றியமைக்கக் கூடிய அறுவை முறையை ஏற்க வேண்டும். ஆடவர்கள் இதைச் செய்து கொள்வது வெகு எளிது. ஆனால் அவர்கள் பிறருக்கு வாத்தியாராக இருக்க மட்டுமே முன்வருகிறார்கள்.

குடும்பக் கட்டுப்பாட்டுக்கு இதுவரை செலவு செய்த பணம் கணக்கு வழக்கற்றது. என்ன பயன்? மாதச் சம்பளம் வாங்கி, தண்ட அறிக்கைகளைத் தயார் செய்து கொண்டிருந்தால் மக்களுக்கு என்ன லாபம்? குடும்பக் கட்டுப்பாட்டுக்குச் செய்த ஒதுக்கீட்டை, ஜனரஞ்சகமான திரைப் படங்கள் எடுத்துச் சிறிய டவுன்களிலும் கிராமங்களிலும் திரையிடச் செய்திருக்கலாம். ஆனால் செய்யவில்லை. மக்கள் யாரை நம்புவார்கள்? அரசியல்வாதியை அல்ல. அதிகாரிகளையும் அல்ல. டாக்டர்களைத்தான். நல்ல தொழில் உள்ள பிரபல டாக்டர்களுக்கு அறுவைச் சிகிச்சைப் பிரசாரம் செய்ய வசதி செய்து கொடுத்திருக்கலாம்.

கருச் சிதைவுக்குத் தாராளமாக அனுமதி கொடுத்தால் போதாது. இதனால் அனர்த்தம் விளைகிறது. கற்றுக்குட்டிகள் சுலபமாகக் கிடைக்கும் சாமான்களைக் கொண்டு கவலை கொண்ட கர்ப்பிணிகளின் உயிரைப் போக்குகின்றனர். இது தாய்க்கு ஆபத்து என்பதுடன் சிசுஹத்தியாகவும் கருதப்படுகிறது.

இந்தச் சூழ்நிலையில் பத்திரிகைகள், ரேடியோ, டெலிவிஷன், திரைப்படங்கள் மூலம் பெரிய அளவில் பிரசாரம் நடக்க வேண்டும்.

இவை யெல்லாவற்றையும் விட முக்கியமாக அறுவைச் சிகிச்சைக்குட்படும் ஆண் மக்களுக்குத் தேர்ந்த வைத்திய உதவியும் சஸ்திர சிகிச்சைக்குப் பின்னர் நல்ல கவனிப்பும் தேவை, பரிசுப் பணம் மட்டும் போதாது.

## நட்சத்திர வடிவம் 'ஜாக்பாட்' பரிசுத்திட்டம்–11

இங்கு உள்ள துண்டங்களை ஜாக்கிரதையாக ஓரத்தையொட்டிக் கத்தரிக்கவும். அவற்றை மேலும் பின்னப்படுத்தக் கூடாது. ஒரு வெள்ளைத் தாளில் இணைசேர்த்து ஒட்டித் திரைப்பட நட்சத்திரத்தின் உருவை முழுமையாக நீள்சதுரப் படமாகக் குறையின்றிக் காண முடிகிறதா பாருங்கள். பத்து கல்கி நேயர்கள் மட்டுமே அவ்வாறு காண முடியும். அதிர்ஷ்டசாலிகளான அந்தப் பத்துப் பேருக்கும் பத்தாவது போட்டி முடிய ஜாக்பாட்டில் சேரும் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும். தவிர ஜாக்பாட்டுக்குச் சேரும் நட்சத்திரங்களின் கையெழுத்துடன் கூடிய புகைப் படங்களும் பகிர்ந்தளிக்கப்படும். பத்து பேருக்கும் குறைவாகவே முழு வடிவத்தை அனுப்பினார்கள் என்றால் அதற்கேற்ப ஒவ்வொருவரும் பெறும் தொகையும் புகைப்படங்களும் அதிகரிக்கும். முடிவு தேதியான ஜூலை 21 தேதிக்குள் அனுப்பப்படும் உருவங்களே பரிசீலிக்கப்படும். உறையின் மேல் 'நட்சத்திர வடிவம்-11' என்று குறிப்பிடவும். கடிதப் போக்குவரத்துக்கு இடமில்லை. கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. உங்கள் விலாசத்தைத் தெளிவாக, ஒட்டப்பட்ட படத்தின் கீழே குறிப்பிட மறவாதீர்கள்!

வெற்றி நடை போடுகிறது

சென்னை **அலங்கார்**

பகல் 11.30 மணி

பாண்டியன்-ராக்ஸி-லிபர்ட்டி

தினசரி 3 காட்சிகள்

மன்சூர் கிரியேஷன்ஸ்

# ஒரு தலை ராகம்

தயாரிப்பு-டைரக்ஷன்

**EM இப்ராஹிம்**

ஒளிப்பதிவு
ராபர்ட்-ராஜசேகரன்

இசை
ராஜேந்தர், ஏ.ஏ. ராஜ்



# சினி மினி

● கிட்டத்தட்ட முப்பது படங்களுக்கு மேல் கதை வசனம் எழுதியிருப்பவர் ஆர். கே. ஷண்முகம். இதில் பல படங்கள் 100 நாள், வெள்ளி விழா எல்லாம் கண்டிருக்கின்றன. ஆனால் ஒரு படத்துக்குக் கூட இவருக்கு பாராட்டு, பரிசு ஏதும் தரப்படவில்லை. "என்ன காரணத்தினாலோ படம் ஓடினாலும் விழா கொண்டாட முடியாமலேயே போய் விடுகிறது இது என் அதிருஷ்டம் போலும்" என்றார் ஷண்முகம்.

● "என் ஜாதகப்படி நான் அரசில் உயர் பதவி வகிப்பேன் என்று எனக்கு முன்பே தெரியும். அதன்படி நான் இரண்டு வருடம் பார்லிமெண்டரி காரியதரிசியாக இருந்துவிட்டேன். நான் சாமானியனாக இருந்த காலத்தில் இதைச் சொன்ன போது எல்லாரும் சிரித்தார்கள்" என்று கூறும் நடிகர் ஐசரி வேலன் இப்பொழுது மிகவும் பிஸியாகப் படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறார்.

● காவிக்கரை வேட்டி. கழுத்தில் ஜபமாலை, பூஜைப் புனஸ்காரம் இப்படித்தான் வீட்டில் காட்சியளிக்கிறார், ஸ்ரீகாந்த். "எனிப்படி?" என்று கேட்டதற்கு "படங்களில்தான் பல வேறு வகையான வேடங்களைப் போடுகிறோம். வீட்டிலாவது உண்மையாக இருக்க வேண்டாமா?" என்றார் சிரித்துக் கொண்டே.

● நடிகர் சசிகுமார் இறந்து பல வருடங்களாகி விட்டன. அவரும் அவரது மனைவியும் இறந்து விட்டதால் அவரது குழந்தைகள் இரண்டையும் வளர்க்கும் பொறுப்பை நடிகர் சங்கம் ஏற்கும் என்று சசிகுமாரின் மறைவுக்குப் பிறகு செய்தி வந்தது. இப்பொழுது அக் குழந்தைகள் எங்கே இருக்கிறார்கள்?

● நடிகரும் இயக்குனருமான பாக்யராஜ் மிகவும் அவசரமாக ஒன்றைத் தேடி வருகிறார். "புது கதாநாயகியையா? இல்லை. கதாநாயகனையா? இல்லை கதையைத்தான். யார் அவரிடம் கதை இருக்கிறது என்று சொன்னாலும் அலுத்துக் கொள்ளாமல் அவர்களுக்கு நேரம் ஒதுக்கி அவர்கள் கூறும் கதையைக் கேட்கிறார். "யாரிடமாவது உண்மையிலேயே நல்ல கதை கிடைக்காதா என்று தேடிக் கொண்டிருக்கிறேன்" என்கிறார்.

● 'சிகரங்கள்' என்ற மலையாளப் படத்தை இயக்கியவர் நடிகை ஷீலா. மலையாளத்தில் அது அமோக வெற்றி பெற்றதன் விளைவு, மலையாளத் தயாரிப்பாளர்கள் எல்லாரும் தங்கள் படத்தை ஷீலா இயக்க வேண்டுமென்று கேட்கிறார்களாம். ஆனால் ஷீலாவோ சொந்தப் படங்களை இயக்கவே விரும்புகிறார். "உங்களது படத்தில் ரவிச்சந்திரன் உண்டா?"; என்ற கேள்விக்கு 'அவரில்லாமல் படமா?" என்றார் ஷீலா.

சலன்











## 13

"என்னடி ஆச்சு? இப்படி எங்க வயத்துலெ புளியைக் கரைக்கிறியே? என்னன்னு சொல்லிட்டு அழு'' என்றாள் ஜானகி.

''உடம்பு சரியில்லையா? வயித்துவலியா?'' என்று பலராமன் கேட்டார்.

''வயித்து வலியா?'' என்று அவர் கேட்டதும் பிரகாஷின் உயிரைக் குடித்துவிட்ட அந்தப் பயங்கர வயிற்று வலியின் நினைவு வந்து அவள் அழுகையை இன்னும் அதிகமாக்கியது.

''என்ன உமா? சின்னக் குழந்தையா நீ? விஷயம் என்னன்னு சொல்லாம இப்படி அழுதியானா நாங்க என்னன்னு நினைக்கறது? யாராவது ரெண்டுப் பசங்க ஏதாவது கேலியாப் பேசினாங்களா?'' என்று ரவி கேட்டான்.

கேட்ட மூன்று பேருக்கும் பதில் சொல்லவில்லை உமா. ஒன்றுமே கேட்காமல் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த உஷாவிடம் சொன்னாள்.

''உஷா, அவர் செத்துப் போயிட்டார்டி. பிரகாஷ் சடன்னு செத்துப் போயிட்டார்.''

''யாரது பிரகாஷ்?'' என்று ரவியும் ஜானகியும் ஒன்றாகக் கேட்டார்கள்.

உஷாவுக்குச் சொல்வதா வேண்டாமா என்று தெரியவில்லை.

''யாருடி பிரகாஷ்? உனக்குத் தெரியுமா?'' என்று ரவி உஷாவைக் கேட்டான்.

''அன்னிக்கு உமா சொல்லிண்டிருக்கலையா அவரைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு? அவர் பேர்தான் பிரகாஷ்.''

''பகவானே! என்னடி ஆச்சு திடீர்னு?'' என்று கேட்டாள் ஜானகி. உமா காதலிக்கும் ஒருத்தன் என்றால் அவன் இளைஞனாகத்தானே இருக்க வேண்டும்? அப்படிப்பட்டவனுக்குத் திடீரென்று ஏன் சாவு வரவேண்டும்? இதுதான் அவளுக்கு உடனே தோன்றிய எண்ணம்.

உமா கண்களையும் மூக்கையும் துடைத்தபடி விஷயம் முழுவதையும் சொன்னதும் ஜானகிக்கு அந்த இளைஞன் பேரில் ஏற்பட்ட பரிதாபம் மறைந்து உஷா பெரிய ஆபத்திலிருந்து தப்பியது போன்ற நிம்மதி ஏற்பட்டது.

''நல்ல வேளை. நீ தப்பிச்சே'' என்றாள் உமாவைப் பார்த்து.

''என்னம்மா சொல்றே நீ?'' என்று கேட்டாள் உமா.

''அவனை நீ கல்யாணம் பண்ணிண்டதுக்கப்புறம் இப்படி ஆகியிருந்தா என்ன கதி?''

''அதையேதாம்மா நானும் கேக்கறேன். அவரைக் கல்யாணம் பண்ணிண்டதுக்கப்புறம் இப்படி ஆகியிருந்தா என்ன பண்ணியிருக்க முடியும்? யாரும் ஒன்னும் பண்ணியிருக்க முடியாதில்லையா? அப்படி நினைச்சிண்டு அவ்வளவுதான் நமக்குப் பிராப்தம்னு இருக்க வேண்டியதுதான் இனிமே. என்னைப் பொறுத்த வரையில் என்னாலே இன்னொருத்தரை அவர் ஸ்தானத்திலே வெச்சுப் பார்க்கவே முடியாது'' என்று உமா சொன்னதும் ஜானகி, ரவி இருவருமே திடுக்கிட்டார்கள்.

# நிறங்களற்ற நிறங்கள்

ஹேமா ஆனந்ததீர்த்தன்



''உனக்கு இப்ப ஏற்பட்டிருக்கிற அதிர்ச்சியிலே நீ இப்படிப் பேசறே. இதெல்லாம் நடக்கக் கூடிய காரியமா என்ன? நாளாக ஆகத் தானே மனசிலே இருக்கிற துக்கம் புண் ஆறிப்போன மாதிரி ஆறிப் போறது. அப்புறம் பார்த்துக்கலாம். இப்ப எதுக்கு அதைப் பத்திப் பேச்சு?'' என்றாள் ஜானகி.

''அவ்வளவு சுலபமா நான் அவரை என் மனசிலேந்து தூக்கி எறிஞ்சிட முடியாது அம்மா.'' என்றாள் உமா வருத்தம் தோய்ந்த குரலில்.

''என்னமோம்மா இந்தக் காலத்திலே இப்படியும் ஒருத்தி இருப்பாள்னு என்னாலே நினைச்சுக்கூடப் பார்க்க முடியல்லே. கட்டிண்ட புருஷன் இருக்கறச்சேயே இன்னொருவன் பின்னாலே ஓடற பொண்ணையும், டைவோர்ஸைப் பத்தி சர்வசாதாரணமா நினைக்கிற பொண்ணையும், புருஷன் சாகக் கிடக்கிருக்கறபோதே அவன் போயிட்டா தான் யாரை கல்யாணம் செஞ்சுக்கலாம்னு கணக்குப் போடற பொண்ணையும் பத்தித் தான் ஸினிமாவுலே காட்டறான். கதைகள் எழுதறாங்க. அதை யெல்லாம் சரின்னு நான் சொல்ல வரலே. என் பெண்களுக்கு அந்த மாதிரி நிலை வரணும்னும் நான் விரும்பலே. ஆனா இந்த மாதிரி, உன் மாதிரி நாலு மாசமோ, ஆறு மாசமோ ஒருத்தனோட சிநேகமா இருந்துட்டு, வாழ்க்கை பூராவும் இனி அவனையே நினைச்சுண்டு சந்நியாசி போலக் காலத்தை ஓட்டுவேன்னு சொல்ற நிலை கண்டிப்பா என் பொண்ணுக்கு வேண்டாம்'' என்றாள் ஜானகி.

ரவிக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. உமாவும் தங்கள் தாயாரும் பேசுவதை அவன் காதுகள் கேட்டுக் கொண்டிருந்தனவே தவிர அவன் மனத்தில் ஓராயிரம் எண்ணங்கள் புகுந்து குடைந்து கொண்டிருந்தன. ஒரு பக்கம் அவனுக்குத் தன் தங்கையை நினைக்கும்போது பெருமிதமாக இருந்தது. கடைசி வரையில் அவளால் உறுதியாக இருக்க முடியுமோ முடியாதோ அது வேறு விஷயம். ஆனால் இப்படி ஓர் எண்ணம் தோன்றுவது — காதலித்தவன் கைவிட்டதாகவே நினைத்துக்கொண்டு அவன் நினைவிலேயே தன் எதிர்கால இன்பத்தை யெல்லாம் தாரை வார்த்துவிடத் தயாராக இருப்பது-அவளுடைய மிக உயர்ந்த



உள்ளத்தைக் காட்டுவதாக அவனுக்குத் தோன்றியது. ஆனால் பிரகாஷுக்கும் உமாவுக்கும் இடையில் ஏற்பட்டிருந்த உறவின் தன்மை, கால அளவு, அவனைப் பற்றிய விவரங்கள் இவை ஒன்றும் தெரியாத நிலையில் உமாவின் இவ்வளவு பெரிய தியாகத்துக்கு அவன் அருகதை உள்ளவன்தானா என்பதைப் பற்றி யெல்லாம் தீர்மானிக்க முடியாததால் என்ன செய்வதென்று தெரியாமல் குழம்பினான். அதே சமயத்தில், உமா தன் தீர்மானத்தில் உறுதியாக இருப்பாளேயானால் தான் தகப்பனாருக்குக் கொடுத்த வாக்கை எப்படி நிறைவேற்றுவது? அதை நிறைவேற்ற முடியாவிட்டால் ராதாவைத் தான் எப்படி மணந்து கொள்ள முடியும்? ராதா இதை எப்படி ஏற்றுக்கொள்வாள்? என்று பல பல யோசனைகள், சந்தேகங்கள், கவலைகளில் மூழ்கி விட்டான்.

டிரைவ் இன் ஹோட்டலின் தோட்டப் பகுதியில் ஒரு மேஜைக்கு முன்னால் உஷாவும் விசுவமும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு முன்னால் மேஜையின் மீது இரண்டு தட்டுக்களில் ஜாங்கிரியும் இரண்டு கண்ணாடித் தம்ளர்களில் குளிர்ந்த தண்ணீரும் வைக்கப்பட்டிருந்தன.

ஒரு துண்டு ஜாங்கிரியை விண்டு வாயில் போட்டுக் கொண்ட விசுவம், ''அப்புறம்? உங்க அக்கா என்ன சொன்னா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

''இதுவரைக்கும் அவ நிலையிலே ஒரு மாறுதலும் இல்லே. கல்யாணப் பேச்சை எடுத்தா எல்லார் மேலேயும் சீறி விழறா.''

''ஆச்சரியமா இருக்கே! அப்படி அந்த பிரகாஷ்கிட்டே அவ என்னத்தைக் கண்டா?''

''உங்க கிட்டே நான் என்னத்தைக் கண்டேன்? அதே போலத்தான்.''

''அப்போ, சப்போஸிங், எனக்கும் நாளைக்குத் திடீர்னு அந்தப் பிரகாஷைப் போல ஏதாவது ஆயிட்டுதுன்னு....'' என்று விசுவம் சொல்ல ஆரம்பித்ததும் உஷா விருட்டென்று எழுந்து அவன் வாயைப் பொத்தினாள்.

''நோ, விசுவம். விளையாட்டுக்குக் கூட அப்படி யெல்லாம் சொல்லாதீங்க. விளையாட்டு வினையாயிடும்னு சொல்லுவாங்க. இல்லாட்டா நாக்குலே சனி இருந்தா சொன்னது அப்படியே பலிச்சுடும்னு சொல்லுவாங்க. அப்படி ஏதாவது ஆயிட்டா உமாவைப் போல நான் உங்களையே நினைச்சு ஏங்கிண்டிருக்க மாட்டேன்.''

''ஐயையோ. அவ்வளவுதானா?''

''ஆமா. உங்க பின்னாடியே நானும் வந்துடுவேன்'' என்று சொன்னாள். உடனே விசுவம் தாவி அவள் வாயைப் பொத்தினான்.

''நோ உஷா. விளையாட்டுக்குக் கூட இப்படி யெல்லாம் பேசாதே'' என்றான்.

இருவரும் சிரிக்க முயன்றும் அவர்களால் சிரிக்க இயலவில்லை.

''நீங்கதானே ஆரம்பிச்சீங்க'' என்று உஷா அவனைக் குற்றம் சாட்டினாள்.

''சாரி உஷா! தப்பை ஒப்புக்கொள்ளுகிறேன். வேற ஏதாவது பேசலாம்'' என்றான்.

ஆனால் வேறு எதைப் பற்றிப் பேசுவது? இருவரது மனத்திலும் ஒரே எண்ணம்தான் நிரம்பி யிருந்தது. வேறு எதைப் பற்றிப் பேசினாலும் திருப்பித் திருப்பிப் பேச்சு இந்த விஷயத்தில்தான் வந்து முடியும்.

ஆகவே இருவரும் சிறிது நேரம் பேசாமல் சாப்பிடுவதில் கவனத்தைச் செலுத்தினார்கள். சர்வர் இரண்டு தட்டுக்களில் ரவா தோசையைக் கொண்டு வந்து வைத்துவிட்டுச் சென்றான்.

''நேத்திக்கு ராமுவைப் பார்த்தேன். பைத்தியக்காரன் போல இருந்தான்'' என்றான் விசுவம்.

''எங்கே பார்த்தீங்க?''

''ஆர்ட்ஸ் காலேஜ்லே புக்ஸ் எக்ஸிபிஷன் நடக்குதே. பார்க்கலாம்னு போயிருந்தேன். தாடியும் மீசையும் கிராப்பும் சந்நியாசியைப் போல் வளர்த்துண்டிருக்கான். டிரஸ்கூட காவி கலர் பாண்ட், ஷர்ட். எங்கேயிருந்து தான் அவனுக்குக் கிடைச்சுதோ! கையிலே ஏழெட்டுப் புஸ்தகங்கள் வெச்சுண்டிருந்தான். எல்லாம் என்ன புஸ்தகம்கறே? பஜகோவிந்தம், 'அண்ணா' எழுதிய சாரதா மணி தேவியாரின் சரிதம், விவேகானந்தரின் ஞானயோகம், ஜே. கிருஷ்ணமூர்த்தி ஸ்பீச்சஸ், சின்மயாநந்தரின் பேச்சுக்கள், ராதா கிருஷ்ணனின் தத்துவ நூல்கள் இப்படித்தான்''

''பாவம். அவன் ரொம்ப உடைஞ்சு போயிட்டான். உமா மேலே ரொம்பப் பிரியம் வெச்சிருந்திருக்கான். பைத்தியக்காரன், ஒரு வார்த்தை எங்கிட்ட யார்கிட்டயாவது வாய் திறந்து சொல்லி யிருக்கப்படாதோ? சொல்லியிருந்தால் ஒருவேளை உமாவுக்கு பிரகாஷ் மேல் நாட்டம் விழறதுக்கு முன்னாலே தெரிஞ்சிருந்தால் அவள் அவனையே 'லவ்' பண்றதுக்கு 'சான்ஸ்' இருந்திருக்குமோ என்னமோ? இட் வாஸ் டூ லேட். வென் ஹி கேம் அவுட் வித் ஹிஸ் மைண்ட்.''

''அதனாலேதான் நான் சொல்றேன். நம்ம ரிலேஷன்ஷிப்பும் உங்க வீட்டுக்கு இப்பவே தெரிஞ்சுடறது நல்லதுன்னு.''

''ராமுகிட்ட நீங்க ஏதாவது சொல்லிட்டீங்களா?''

சட்டம் ஒழுங்கையும் அதை நிர்வகிக்கும் அதிகாரிகள் அமைச்சர்களையும் துச்சமாக மதித்து பகிரங்கமாக எதிர்த்து தன்னிச்சையான வாழ்க்கை நடத்தும் இத்தாலியர்கள் உண்டு. அந்நேசத்தின் அடிவாரத்தில் உள்ள சிசிலி என்ற தீவில் தோன்றிய இவர்கள் மாஃபியா என அழைக்கப்பட்டனர். இவர்களில் பலர் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் அமெரிக்காவிலும் - குறிப்பாக நியூயார்க் - குடியேறிப் படாதபாடு படுத்தினார்கள். அவர்களுக்கென்று தனிச் சட்டம், தனி நியாயம், தலைவன், அமைச்சர்கள் எல்லாம் உண்டு! கொடிய சித்தம் கொண்டிருந்த இவர்களிடம் வாக்குத் தவறாமை, நட்புக் காத்தல், தலைவனிடம் பக்தி போன்ற சில அரிய குணங்களும் அமைந்திருக்க விசித்திர மனிதர்களாய் விளங்கினர்.

இவர்களைக் கதா பாத்திரங்களாக்கி காட்ஃபாதர் என்ற தலைப்பில் நாவல் படைத்தார் மேரியோ புஸோ. வாசகர்களுக்கு பயங்கரமும் பச்சாத்தாபமும் கோபமும் அனுதாபமும் ஒருங்கே உண்டாக்கிப் பெரும் புகழ்

''மதா, தோ, காதல், இதல்லெல்லாம் பேசற நிலைமையிலா அவன் இருக்கான்? நான் உமாவைப் பத்தியும் கேக்கல்லே. உன்னைப் பத்தியும் சொல்லல்லே.''

''அதுதான் நல்லது. இப்ப நம்மளைப் பத்தி வீட்டிலே சொல்றமாதிரி சூழ்நிலையே இல்லே. என்னைப் பொறுத்த மட்டிலும் நான் தீர்மானம் பண்ணி வெச்சுட்டேன். உமா மனசு மாறி அவ ராமுவையோ வேறே யாரையாவதோ கல்யாணம் பண்ணிக் கறதா ஒத்துண்டதுக்கப்புறம்தான் நம்ம விஷயத்தைப் பத்தி நான் பேச்சே எடுப்பேன். அதுவரைக்கும் வாயைத் திறக்க மாட்டேன்''

விசுவம் இதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் மௌனமாக இருப்பதைக் கண்ட உஷா, ''என்ன விசுவம், பேசாம இருக்கீங்க? நீங்க எனக்காக 'வெயிட்' பண்ண மாட்டீங்களா?'' என்று கேட்டாள்.

''என் மேலே உனக்கு அந்தச் சந்தேகம் இருக்கா உஷா?''

''இல்லே. இருந்தாலும் உங்க வாழ்க்கையிலே—இவ்வளவு தூரம் நான் குறுக்கிட்டு உங்கள் மகிழ்ச்சியைத் தடுத்து நிறுத்த எனக்கு உரிமை இருக்குன்னு எனக்குச் சில சமயங்கள்ல தோணறது.''

''அப்படியெல்லாம் நீ நினைக்கவே வேண்டாம் உஷா. இப்ப உங்கண்ணு ரவி காத்திருக்கலியா? அவனுக்காக அந்த ராதா காத்திருக்கலியா? உமா வாழ்க்கை முழுதும் காத்திருக்கத் தயாரா யிருக்காளே? ராமு எப்படி இருக்கான்! இப்படி நம்மைச் சுத்தி நமக்குச் சம்பந்தப்பட்டவங்களெல்லாம் தன் சுகம், தன் காதல் என்று நினைக்காமல், கொஞ்சம் கூடச் சுயநலம் இல்லாம, பிறருக்காகவே வாழ்ந்துக்கிட்டிருக்கறப்ப, நான் மட்டும் எப்படிச் சுயநலவாதியா இருக்க முடியும்? எனக்கு நீதான் முக்கியமே ஒழிய வேறொண்ணும் முக்கியமல்ல, உஷா. உனக்காக நான் எவ்வளவு நாள் வேணும்னாலும் காத்துண்டிருப்பேன். அப்படிக் காத்துண்டிருப்பதிலேயே எனக்கு ஒரு வித திருப்தியும் மகிழ்ச்சியும் ஏற்படுது.''

''ரொம்பத் தாங்க்ஸ் விசுவம். நான் இந்த விதத்திலே அதிர்ஷ்டசாலிதான். எனக்கு நம்பிக்கையும் இருக்கு. இந்த நிலைமை



'என்ன அநியாயம் ஸார்! ஸ்கூல் அட்மிஷனுக்கு இப்படி டொனேஷன் வாங்கறாங்களே கேட்பார் இல்லையா!''
''ஏன் நீங்கதான் கேட்கிறது?''
''நமக்கேன்ஸார் வீண் வம்பு!''

ரொம்ப நாளைக்கு நீடிக்க முடியாதுன்னு நான் நம்பறேன். திடீர்னு ஒரு நாள் உமா மனசு மாறலாம். அப்ப எல்லாம் சரியா விடும்.''

இந்தப் பேச்சுக்கள் நடந்து கொண்டிருந்த போதே சர்வர் காப்பியைக் கொண்டு வந்து வைத்துவிட்டிருந்தான். இருவரும் தோசை சாப்பிட்டு முடித்திருந்ததனால் காப்பியைச் சாப்பிட்டுவிட்டு எழுந்திருந்தார்கள்.

23 ஏ பஸ்ஸைப் பிடித்து ஏறினார்கள். வழக்கம்போல் உஷா பெண்கள் பகுதியில் ஒரு சீட்டிலும், விசுவம் ஆண்கள் பகுதியில் ஒரு சீட்டிலுமாகப் போய் உட்கார்ந்துகொண்டார்கள். தனித் தனியாக டிக்கெட்டுகள் வாங்கிக் கொண்டார்கள். பார்ப்பவர்களுக்கு இவர்கள் இருவரும் காதலர்கள் என்பதும் சென்ற ஒரு மணி நேரமாக இருவரும் டிரைவ் இன் ஹோட்டலில் உட்கார்ந்து அந்தரங்கமாகவும் அந்நியோந்யமாகவும் பேசிக் கொண்டிருந்தார்கள் என்றும் சிறிது கூடச் சந்தேகம் ஏற்படாத வண்ணம் நடந்துகொண்டார்கள்.

(தொடரும்)




பெற்றது நாவல். அதுவே திரைப்படமாகவும் உருவாகி பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. அந்த வெற்றியின் அடிப்படையில் இப்போது அப்படத்தின் இரண்டாம் பாகம் தயாரிக்கப்பட்டு வெளி வந்திருக்கிறது. அதே தயாரிப்பாளர் - இயக்குனர்: கொப்போலா அதே திரைக்கதை ஆசிரியர்: மேரியோ பூஸோ.

சத்தம் கேட்காதிருக்கத் துப்பாக்கியை கனமான டவலில் சுற்றிப் பகைவனைச் சுடுகிறான் விட்டோ கோர்லியோன். மாஃபியா அணியில் பதவியில் படிப்படியாக அவன் உயர முதல் கட்டம் இது!

மூன்று தலைமுறைகளுக்கு நடந்த அதிகாரப் போராட்டத்தைச் சித்திரிக்கும் படம். காட்சிகளை வேண்டுமென்றே காலக் கிரமப்படி அமைக்காது முன்னும் பின்னுமாகத் தொகுத்திருக்கின்றனர். மொத்தம் 200 கதா பாத்திரங்கள்! படப்பிடிப்புக்கு, படம் எடுத்து முடிவதற்குள் 10,000 உடைகள் தைக்க வேண்டியிருந்தது!

- டி. எம். ஆர்

# Kalki Shopping Page

Dyanora
KELTRON TV
Bharat TV
CROWN TV
TELERAD
Texla®



PHILIPS
USHA



**Available in easy instalments**

டயனோரா, கெலட்ரான், பாரத், கிரவுன், டெலிராடு, டெக்ஸ்லா டிவி, பிலிப்ஸ் ரேடியோ, டிரான்சிஸ்டர்ஸ், ஸ்டீரியோஸ், டேப்ரெகார்டர்கள், கார் கேஸட் ஸ்டீரியோ, டேப்ஸ், உஷா தையல் மெஷின்கள், ஃபேன்கள், அரவை இயந்திரங்களும் இதர மின்சார சாதனங்களும்.

## TVM டிவி ட்ரானிக்ஸ்

74, சிருவள்ளூர் ரோடு, பெரம்பூர், போன்: 661533
7, சுங்கு ராம செட்டி தெரு, பாரீஸ், போன்: 27427
96, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, தண்டையார்பேட்டை, போன்: 554074

Kamara



## பார்த்தாஸ் டெக்ஸ்டைல்ஸ்

உங்கள் ஜவுளி தேவைகளுக்கு தென்னகத்தின் தலைசிறந்த ஜவுளி ஸ்தாபனம்

**பார்த்தாஸ்**
நாகர்கோவில்

கோட்டயம், எர்ணாகுளம், சங்கனாச்சேரி, ஆற்றிங்கல், காயங்குளம் &K.L.R. பாம்பே

Mgd. by
M. Srinivasa Reddiar




வெஸ்டெர்லி சப்தமின்றி சுழலுவதுடன் அதிக அளவு காற்றையும் அளிக்கவல்லது. 30% வரை மின்சாரச் செலவை மிச்சப்படுத்துகிறது. நான்கு வித குளிர்ச்சி மிகு வண்ணங்களில் கிடைக்கிறது.

வாங்குங்கள்

# வெஸ்டெர்லி

ஒரு அற்புதமான ஃபேன்!

# Kalki Shopping Page

## Bharat TV NOW COMES TO YOU WITH SOLID STATE TECHNOLOGY





| **20" Urvashi Solid State** (Shutter Type) | **20" Solid State BT 202** (without shutters) |
|---|---|
| • Laminated sliding shutters | • 20 cm 'Hi-fi' dual cone speaker |
| • 3 ICs single printed circuit board | • Acoustically designed cabinet |
| • Automatic picture control | • 3 ICs |
| • Multichannel tuner | • Multichannel tuner |
| • 20 cm dual cone double speaker | • Automatic picture control |

*Available at*

**T. V. TRADERS**

2, Sir C. P. Ramaswami Aiyar Road,
Alwarpet, Madras-600 018 Ph: 71238

AA-155, Anna Nagar,
Madras-600 040 Ph: 614899

---

# எல்லா வயதினருக்கும் எல்லா தேவைகளுக்கும் கைத்தறி!

## கோ-ஆப்டெக்ஸ்

கைத்தறி

**கற்பகம்**

புரசவாக்கம் நெடுஞ்சாலை
சென்னை-600 007

அருகில் உள்ள விற்பனை நிலையங்களுக்கு வருகை தாரீர்!

---



# கல்கி

## சந்தா விவரம்

★

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 46 | ரூ. 23 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 64 | ரூ. 32 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 100 | ரூ. 50 |

**மானேஜர்**

கல்கி, சென்னை-600 032

**எம். வி. சுப்பையா**

(மானேஜிங் டைரக்டர், டி.ஐ. அண்ட் எம்.)

பழங்கால கலைப்பொருட்களைச் சேகரிப்பதிலும் அது பற்றி அறிந்து கொள்வதிலும் ஆர்வமுடையவர் திரு எம். வி. சுப்பையா.

பழைய தஞ்சை மகாராஜாக்களுக்கு ஆடை வேலைப்பாடுகள் செய்வதற்காக ஆந்திர மாநிலம் 'கலம்காரி'யிலிருந்து வந்து குடியேறிய ஒரு குடும்பத்தைப் பற்றி ஒரு புத்தகத்தில் படித்தார். கும்பகோணம் அருகில் சிக்கல் நாயக்கன் பட்டியில் அவர்களைத் தேடிச் சென்று சந்தித்தார்.

அய்யனார் குதிரையிலிருந்து கோவில் சிற்பங்கள், வெண்கலப் படிமங்கள், பழமையான பாத்திரங்கள் என்று எல்லாவற்றையும் வியக்கும் திரு சுப்பையா தாலாட்டு ஒப்பாரி போன்ற பழமையான இலக்கியங்களையும், சம்பிரதாயமாகப் பாடும் வடிவில் ஒலிப்பதிவு செய்து ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்கிறார். நகரத்தாரின் பழைய கணக்கு வைப்பு முறைகளை நுணுக்கமாய் அறிந்தவர்கள் வெகு சிலர்தான் இருக்கிறார்கள். பழமையான கணக்கு ஏடுகளை, இவர்களின் உதவியுடன் ஆராய்ச்சிப் படிப்புக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்கிறார்.

பர்மிங்ஹாம், ஆஸ்டன் பல்கலைக் கழகத்திலும் ஹாவர்ட் பல்கலைக் கழகத்திலும் தொழில் நிர்வாகம் பற்றிப் படித்த இவர், ஆஸ்டன் பல்கலைக் கழக டென்னிஸ் டீமில் விளையாடியவர். தினமும் யோகாசனம் இருபது நிமிடங்கள் செய்கிறார். நண்பர்கள் வற்புறுத்தியும் சிகரெட் பிடிக்கும் பழக்கத்தை அறவே ஒதுக்கியவர்.

**லேனா தமிழ்வாணன்**

(ஆசிரியர், கல்கண்டு)

பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் இலக்கியத்தில் எம். ஏ. படித்துப் பட்டம் பெற்ற இவர், தாம் உண்டு தம் படிப்பு உண்டு என்று இருந்தார். ஆனாலும் அப்பாவுக்குத் தெரியாமல் செய்த காரியம் ஒன்று உண்டு.

அதுதான் தில்லி பல்கலைக் கழகத்தில் தபால் மூலம் 'டிப்ளோமா இன் ஜர்னலிசம்' படித்தது. முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றுப் பட்டச் சான்றிதழை அப்பாவிடம் காட்டியபோது அவர் மகிழவே செய்தார்.

சட்டக் கல்லூரியில் முதலாண்டு படிக்கும் போது திரு தமிழ்வாணன் காலமானதால், அவருடைய இடத்தில் கல்கண்டு ஆசிரியர் பதவியில் இவர் நியமிக்கப்பட்ட போது படிப்பு நின்றது. "இப்படி ஒரு நிலைக்கு என்னை உயர்த்திய எஸ். ஏ. பி. யையும், பி. வி. பார்த்தசாரதியையும் என்றுமே மறக்க மாட்டேன்" என்கிறார்.

ஒரு புதிய செய்தி: லேனா தமிழ் வாணன் ஒரு கவிஞரும் கூட. 'கண் இமையில் மறைந்த கனவுகள்' என்ற தலைப்பில் அவருடைய முதல் கவிதைத் தொகுப்பு வெளிவரவிருக்கிறது. அப்பா தமிழ்வாணன் தொடாத துறை.

கிழக்காசிய நாடுகள் பெரும்பாலானவற்றுக்குப் போய் வந்துள்ள லேனாவுக்கு மேற்கத்திய இசையில் அளவற்ற ஈடுபாடு.

புகைப்பது, காப்பி, தேநீர், வெற்றிலைபாக்கு, புகையிலை மூச்! 'லக்ஷ்மி'யின் நாவல்களை மிகவும் ரசிக்கிற லேனா இலக்கியங்களில் தூய்மையை விரும்புகிறவர்.

**கலா கே. தாக்கர்**

இரு நூறு ஆண்டுகளுக்கு முன்னால் குஜராத்திலிருந்து தஞ்சை மண்ணில், முத்து வைர வாணிகர்களாய்க் குடியேறியவர்கள், இந்த மண்ணோடும், மரபுகளோடும் ஒன்றிவிட்டார்கள்.

அந்தக் குடும்பங்கள் ஒன்றில் பிறந்து, "கோடாவாள்" இனத்தாரின் பலத்த எதிர்ப்புகளுக்கிடையே படித்துப் பட்டம் பெற்று ஆசிரியைப் பணிக்கு வந்த முதல் பெண்மணி இவர். குரோம்பேட்டை வைணவக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர்.

'கல்கி, கே. எம். முன்ஷி'யின் வரலாற்று நாவல்களை ஆராய்ந்து, டாக்டரேட் பெறப் படித்து வருகிறார் திருமதி கலா தாக்கர்.

முன்னாள் ஆளுநர் டி. கே. கே. ஷா அவர்களின் விருப்பப்படி குஜராத்தி நாவல் ஒன்றை "வெள்ளைக் கறை" என்ற பெயரில் ('விநூகோ டெர்மா'வுக்குக் குறியீடு) தமிழாக்கியுள்ள இவருடைய ஆசை இன்னும் நிறைய குஜராத்திக் கதைகளையும் நாவல்களையும் தமிழாக்க வேண்டும் என்பது தான்.

அமரர் கல்கியின் எல்லாப் படைப்புகளுக்கும் (தலையங்கங்கள் தவிர) ஓர் அட்டவணை தொகுத்து வெளியிடும் பணியில் இப்போது ஈடுபட்டுள்ளார்.

— சுப்ரபாலன்

# புதிய தலைமுறை

இளங்கோவன்
கண்ணகி



எஸ். டி. எஸ். யோகியார்
அதிர்ஷ்டம்



சுரதா
அமரகவி



பாரதிதாசன்
வளையாபதி



கோவை அய்யா முத்து
கஞ்சன்





புதுமைப்பித்தன்
ராஜமுக்தி



கு. சா. கிருஷ்ண மூர்த்தி
அந்தமான் கைதி



எஸ். வி. சகஸ்ரநாமம்
பைத்தியக்காரன்



விந்தன்
கூண்டுக்கிளி



கா. மு. ஷெரீப்
புதுயுகம்

# திரைக்கதை சிறப்பிதழ்: வட்டமேஜை

● தமிழ்த் திரை உலகில் திரைக் கதை வசனத்துக்குச் சிறப்பிடம் தேடித் தந்த இளங்கோவனை மறந்துவிட்டீர்களே? மேலும் சில படங்களுக்கே திரைக் கதை வசனம் எழுதினாலும் சிறப்பாக எழுதிய பாரதிதாசன் (வளையாபதி), சுரதா (அமரகவி), கா.மு. ஷெரீப் (புதுயுகம்) கு. சா. கிருஷ்ணமூர்த்தி (அந்தமான் கைதி) எஸ். டி. எஸ். யோகியார் (அதிர்ஷ்டம்), கோவை அய்யாமுத்து (கஞ்சன்) விந்தன், (கூண்டுக்கிளி), புதுமைப்பித்தன் (ராஜமுக்தி), எம். எஸ். கண்ணன் (போர்ட்டர் கந்தன்), சவகை ப. கண்ணன் (ஜமீன்தார்), ஏ.வி.பி. ஆசைத்தம்பி (சர்வாதிகாரி), கே. ஜி. ராதாமணாளன் (தங்கரத்தினம்), ரா. வேங்கடாசலம் (பெண்) நா. சோமசுந்தரன் (மனிதன்), எஸ். வி. சகஸ்ரநாமம் (பைத்தியக்காரன்) வேங்கடராமானுஜன் (முதலாளி) என். வி. ராஜாமணி (கண்கள்), மல்லியம் ராஜகோபால் (ஜீவநாம்சம்), இன்னும் பலரையும் எம். ஜி. ஆரின் படங்கள் பலவற்றுக்குத் திரைக் கதை வசனம் எழுதினசொர்ணத்தையும்பெயரையாவது குறிப்பிட்டிருக்கலாமே?

சாலியமங்கலம் ந. மெய்ப்பொருள்

● ஜெயலலிதாவை ஒரு நடிகையாகத்தான் நாம் இதுவரை பார்த்துள்ளோம். அவரிடமுள்ள மற்ற திறமைகளையும் வெளிக் கொணரும் பொருட்டு ஒரு தொடர்கதை, ஒரு இதழையே உருவாக்கும் பொறுப்பு ஆகியவற்றைக் கொடுத்துத் திரைக் கதைச் சிறப்பிதழை வெளியிட்டுள்ளீர்கள். நம் இருவரையுமே (வாசகர்களையும் ஆசிரியரையும்) அவர் ஏமாற்றவில்லை.

பெங்களூர் எஸ். மனோகரன்

● ''திரைக் கதைச் சிறப்பிதழ்'' மிகவும் அருமை. ஐந்தெழுத்து அரச இயக்குநர் இயக்கிய திரைப் படம் ஒன்றினை ரசித்த திருப்தி ஏற்பட்டது.

கோவை 12 துரை பால்ராஜ்

● அடேயப்பா! திரைக் கதைத் துறையில் இத்தனை வல்லுநர்களா? பக்கத்துக்குப் பக்கம் ஆல்பத்தைப் புரட்டுவது போல் இருந்தது. தேனீக்கள் சொட்டுச் சொட்டாகத் தேனைச் சேகரிப்பது போல் சேகரித்துள்ளீர்கள். நிறைவான இதழ்.

சிவகாசி சிதம்பரம் செல்வி

● திரைக் கதைச் சிறப்பிதழ் படிக்க நேர்ந்தது மிக்க வருத்தமாக இருக்கிறது. கல்கியின் தரம் இவ்வாறெல்லாம் குறைந்துபோக வேண்டுமா?

சென்னை 5 நா. மைதிலி

● திரைக் கதைச் சிறப்பிதழ் ஏ 1. சினிமாவுக்கென்றே எவ்வளவோ பத்திரிகைகள்

# மறந்தது ஏனோ?

இருந்தும் இவ்வளவு அழகாகத் தொகுத்தளித்தது இல்லை என்று நினைக்கிறேன்.
சென்னை கலாமூர்த்தி

● தாங்கள் டைரக்ட் செய்த சில காட்சிகள் பொருத்தமற்றதுதான் எனச் சில டைரக்டர்களாவது ஒப்புக்கொண்டு விட்டார்களே. சந்தேகமே வேண்டாம். இனி தமிழ்ப் பட உலகுக்கு நல்ல எதிர்காலம்தான்.
திருவனந்தபுரம் எஸ். எஸ். மணி

● ''உறவின் கைதிகள்'' ஆரம்பமே பிரமாதம்.
மதுரை 1 எஸ். செல்லம்

● ''உறவின் கைதிகள்'' தொடர் ஜெட் வேகத்தில் செல்கிறது. அடுத்த இதழை எப்போது படிப்போம் என்ற ஏக்கம் எழுகிறது.
துடுப்பதி பி. ரங்கநாதன்

● Trend Setter களை மிகவும் சரியாக வரிசைப்படுத்தி மேலட்டையில் வெளியிட்டிருப்பதை மிகவும் ரசித்தேன்.
ஜெயலலிதாவின் தொடர்கதை பரவாயில்லை. ஆனால் ராஜீவ் என்ற பெயரை இத்தனை முறை குறிப்பிட்டு ஒரே அத்தியாயத்தில் எழுதுவதா?
பங்களூர் எம். ஆர். மனோகர்

● ஜெயலலிதா அவர்களின் ''உறவின் கைதிகள்'' முதல் அத்தியாயமே சிறப்பாக அமைந்து விட்டது. கதைக்கு ஏற்றவாறு பிரேம் மாயாவின் படங்கள் ஏ ஒன்.
நாகப்பட்டினம் எம். முத்துராஜசேகர்

● மகரிஷி குழந்தைகளைத் தேர்ந்தெடுத்ததில் பாரபட்சம் காட்டிவிட்டார். அவரது ஒரு நாவலை அற்புதமாய்ப் படம் எடுத்திருந்தார் கே. எஸ். ஜி. படம் 'என்னதான் முடிவு' கல்கி கே. எஸ். ஜி.யின் அட்டைப் படம் போட்டது அதற்கு.
கதை வசனகர்த்தாக்களில் நீங்கள் சக்ரபாணியை விட்டுவிட்டது நினைவுக்கு வந்தது.
மைசூர் திவ்யா

● ''நாவல் படமானபோது'' என்ற பேட்டியில் மணியன் பற்றி ஒன்றும் இல்லையே? காழ்ப்புணர்ச்சியா?
தூத்துக்குடி தங்கபாண்டியன்

[அதெல்லாம் ஒன்றுமில்லை சுவாமி; பேட்டிக்கு நமது நிருபர் அவரை அணுகியபோது ''என் பத்திரிகையில் என்னைப் பத்தி வந்தால் போதும்;'' என்று கூறி அனுப்பி விட்டார். என்ன செய்ய?]

● பல வெற்றிப் படங்களை டைரக்ட் செய்த எம். ஏ. காஜாவைப் பற்றி சிறு குறிப்புக் கூட இல்லையே?
வேதபுரம் கோவி. ராமு

திருவாரூர் கே. தங்கராசு
ரத்தக் கண்ணீர்



சக்ரபாணி
கல்யாணம் பண்ணிப்பார்



ஜி.என். வேலுமணி
நம்ம வீட்டுத் தெய்வம்



ஆசைத்தம்பி
சர்வாதிகாரி



கோமல் சுவாமிநாதன்
நவாப் நாற்காலி





மல்லியம் ராஜகோபால்
ஜீவனாம்சம்



வி. ஸி. குகநாதன்
புகுந்த வீடு



முரசொலி சொர்ணம்
நம்நாடு



எம். ஏ. காஜா
இனிக்கும் இளமை



மணியன்
இதயவீணை



[பின் அட்டை தொடர்ச்சி]

இப்படத்தின் கதைக்கு உண்மையான சில நிகழ்ச்சிகளே அடிப்படை. நிறைவேறாத காதலால் வெம்பி வதங்கும் எத்தனையோ உள்ளங்களின் பிரதிபலிப்பு இந்தத் திரைச் சித்திரம். இக்காதல் கதையை, நமது கலாச்சாரம் பண்பாடு ஆகியவற்றைப் பெருமைப் படுத்தும் விதமாக, சிறிதும் விரசம் இன்றி, வியாபாரத்தனமான விட்டுக் கொடுக்கல்கள் இன்றி கலைபூர்வமாக எடுக்க வேண்டும் என்று படத்தின் ஆரம்பத்திலேயே முடிவு கட்டினேன். நான் உள்ளத்தில் இக்கதையை எவ்விதம் உணர்ந்தேனோ அவ்விதமே பார்ப்பவர்களின் மனங்கள் உணர வேண்டும் என்பது எனது லட்சியமாக இருந்தது.

நடிக, நடிகையர் மட்டுமின்றி, டெக்னீஷியன்கள் அளவிலும் கூடிய மட்டும் புதிய முகங்களைப் போட்டே இப்படத்தை எடுத்து முடித்தேன்.

படப்பிடிப்பு சுமார் இரண்டே மாதக் காலத்தில் முடிந்தாலும் பூர்வாங்கமாக ஒவ்வொரு காட்சியையும் நன்கு யோசித்துத் திட்டமிட ஒரு வருட காலம் ஆயிற்று.

படம் எடுக்க ஆரம்பித்த நாள் முதல் இப்படம் நிச்சயம் வெற்றியடையும் என்பதில் எனக்குத் துளிக்கூடச் சந்தேகமில்லை. என் நம்பிக்கை வீண் போகவில்லை.

ஒருமுறை பார்த்தவர்களை மறுபடியும் பார்க்கத் தூண்ட வேண்டும் என்கிற நோக்கில் ஒரு சில விசேஷத் தன்மைகளைப் புகுத்தினேன். அவை நான் எதிர்பார்த்த அளவில் அமைந்து விடவே தற்போது இப்படத்தைத் திரும்பத் திரும்பப் பார்ப்போர் அதிகம்.. சென்னை லிபர்டி தியேட்டரில் நேற்று வரை தொடர்ச்சியாக ஒருவர் 118 காட்சிகள் பார்த்துள்ளதாக அறிகிறேன். ''பலமுறை பார்த்தேன்'' என்று ஏராளமான கடிதங்கள் வருகின்றன.



# ஒரு தலை ராகம்!

'தங்களது வாழ்க்கை போலவே உள்ளது' என்று சோகத்துடன் பலர் கடிதம் எழுதுகின்றனர்.

இப்படத்தைப் பூர்த்தி செய்த பின் நான் பார்த்தபோது இப்படத்தின் நிறைவேறாத காதலும் சோகமும் என் மனத்தையே வெகுவாகப் பாதித்தது. இன்னும் அப்பாதிப்பு நீங்கவில்லை.

அதிகம் வசனம் இல்லாமல் பார்வையிலேயே பேசி, உணர்ச்சி பாவங்களை நான் எதிர்பார்த்த மாதிரியே வாரி இறைத்துச் சிறப்பாக நடித்த சங்கருக்கும், ரூபாவுக்கும் நல்ல எதிர்காலம் இருக்கிறது. படத்தில் வில்லனாக நடித்த ரவீந்திரனின் சிறப்பான நடிப்பு திரையுலகில் ஏற்கனவே நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளதை அறிகிறேன். இவர்கள் மட்டுமின்றி இப்படத்தில் தொடர்பு கொண்ட எல்லாருக்குமே இன்று நல்ல மதிப்பு.

''சிறப்பான தொகை கொடுக்கிறேன், ஒரு படத்தை இயக்கித் தயாரித்துக் கொடுங்கள்'' என்று பலர் என்னை வந்து கேட்கின்றனர். சொந்தமாகவே செய்ய வேண்டும் என்ற தீர்மானத்தில் இத்தகைய வாய்ப்புகளை நான் ஏற்கவில்லை.

ஒரு வேடிக்கை என்னவென்றால் 'ஒருதலை ராகம்' எடுத்து முடித்ததும் அதை வாங்கத் தயங்கிய பல விநியோகஸ்தர்கள் தற்போது போட்டி போட்டுக் கொண்டு தங்களுக்கு விற்கக் கேட்டு வருகின்றனர்.

யதார்த்தமான, கலை ரசனை மிக்கதான படம் எடுத்தாலும் பெருவெற்றி பெற முடியும் என்பதற்கு 'ஒரு தலை ராகம்' எடுத்துக் காட்டு.

**சங்கர்**

இப்ராஹிம் தமிழ்த் திரையுலகில் ஒரு புதிய சகாப்தம் படைக்கப் போகிறார் என்றால். மிகையல்ல. தமது முதல் படத்திலேயே அவர் வெளிப்படுத்திய முதிர்ச்சியான செயல் திறனும், ரசனையும் பிரமிப்பை உண்டாக்கின.

அவர் ஓர் இயக்குனர் என்பதற்கும் அதிகமாக ஒரு ரசிகர் என்று எனக்குத் தோன்றுகிறது. மக்களுக்கு எதை எப்படிக் கொடுத்தால் ஏற்றுக் கொள்வர் என்பதை வெகு துல்லியமாகக் கணித்துப் படத்தைத் தயாரித்துச் சாதனை புரிந்திருக்கிறார்.

'படம் முழுவதிலும் காதல் காட்சியே இல்லாததனால், கனவுக் காட்சியிலாவது கதாநாயகனும், நாயகியும் ஜோடி பாடுவது போன்று ஒரு பாடல் போடலாம்' என்று யூனிட்டில் இருந்த அனைவரும் அபிப்பிராயம் தெரிவித்த போது, இப்ராஹிம் பிடிவாதமாக யோசனையை மறுத்தார்.



''கனவுக் காட்சியில் நாயகனும், நாயகியும் டூயட் பாடி இணைந்து நடித்தால், படத்தின் முடிவில் கதாநாயகன் இறக்கும் தருணத்தில், அவன் மேல் உள்ள அனுதாபம் ஓரளவு குறைந்து போகும். 'ஒரு காட்சியிலேனும் இணைந்து இருப்பதற்கு வாய்ப்பு கிடைத்தது' என்கிற சிறு திருப்தி பிறக்கும். அதுகூட படம் பார்ப்பவருக்கு ஏற்படாமல் செய்துவிட வேண்டும். கதாநாயகனின் தோல்வியைத் தங்கள் தோல்வியாக எண்ணி அவர்கள் கண்ணீர் வடிக்க வேண்டும். அதில்தான் படத்தின் வெற்றியே இருக்கிறது'' என்று விளக்கம் கூறினார்.

அவரது கணிப்பு எத்தனை தீர்க்கதரிசனமானது என்று இப்போது புரிகிறது.

படத்தை வாங்க ஆர்வமுடன் விநியோகஸ்தர்கள் முன்வராத போதும் கவலைப்படாமல் பணத்தைச் சிறிதுகூட கணக்குப் பார்க்காமல், தான் நினைத்தபடி காட்சிகள் அமைய வேண்டும் என்ற ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக்கொண்டு செயலாற்றிப் படத்தைத் தாமே ரிலீஸும் செய்தாரென்றால் அவரது மனத் திண்மையை என்னவென்று கூறுவது?

இப்படம் நகரங்களில் மட்டுமின்றி கிராமப் புறங்களிலும் சிறப்பான வரவேற்பைப் பெற்றுள்ளது. சின்ன சின்ன அசைவுகள், நடிப்பு முத்திரைகளைக் கூட ரசித்து மக்கள் கைதட்டுவதைக் காணும் போது இம்மாதிரியான படத்தில் நடிக்க வாய்ப்புக் கிடைத்ததை நினைத்துப் பெருமையாக உள்ளது.

மக்களின் ரசனையை உயர்த்த இம்மாதிரியான படங்கள் இனி நிறைய வெளியாக வேண்டும் என்பது என் அவா.

## ரூபா

குடும்பப் பாங்கான முகம். கவிதை பேசும் விழிகள். பேசும்போதும் மிருதுவாக நகைக்கும் போதும் குவியும் உதடுகளில் பிறக்கும் நாணம் ஒரு வசீகர சக்தியை ரூபாவுக்குக் கொடுக்கிறது.

'ஒரு தலை ராகம்' படத்தில் எம்.ஏ. மாணவியாக நடிக்கும் ரூபா, சரித்திரத்தில் வெங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. பட்டம் பெற்றவர்.

''படம் ரிலீஸானதும் ஒரு முறைதான் பார்த்தேன். அப்போதும் நான் சரியாக நடித்துள்ளேனா என்கிற விமர்சன நோக்கில் பார்த்தேன். மறுமுறை பார்த்தால் படம் என் உள்ளத்தையும் பாதிக்குமோ என்னவோ'' என்றார் ரூபா. தொடர்ந்து கூறினார்:

''படம் பெருவெற்றி பெற்றுள்ளதற்குக் காரணம் இந்த அம்சம்தான் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. படத் தயாரிப்பில் பங்கேற்ற அனைவரின் கூட்டு முயற்சியும் பலன் அளித்துள்ளது.

படத்தின் இயக்குனரான திரு இப்ராஹிம் அவர்களே படத் தயாரிப்பாளராக இருந்தது ஒரு வசதி. இதனால்தான் எவ்வித விட்டுக் கொடுத்தலும் இன்றி இயக்குனர் தாம் நினைப்பது போன்று படத்தை எடுக்க முடிந்தது.

இப்படத்தின் பெரு வெற்றியினால் மக்களின் ரசனை மாறியுள்ளது என்று சொல்லி விட முடியாது. இதே காலக் கட்டத்தில் மசாலா ''பார்முலா'' படங்களும் வெற்றி பெறுவதைக் காண முடிகிறது.



'ஒரு தலை ராகம்' கதாநாயகி சுபத்ரா. ராஜாவை மனதார விரும்பியும், தன் தாய் வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு கசப்பான அனுபவத்தால் தனது காதலை வெளிப்படுத்தாமல் உள்ளுக்குள்ளேயே புதைத்துக் கொள்கிறாள். எந்தப் பெண்ணும் சுபத்ரா அளவுக்குக் கண்டிப்பாக இருக்க மாட்டாள் என்று ஓர் அபிப்பிராயம் கூறப்படுகிறது. அது சரியாகப் படவில்லை. குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒரு பெண் எப்படி நடந்து கொள்வாள் என்று அவள் நிலையில் இருந்து பார்த்தால் தான் உணர முடியுமே தவிர பொதுப் படையாகக் கணிக்க முடியாது. சுபத்ரா ஒரு நல்ல கதாபாத்திரம். எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அப்பாத்திரத்தின் தன்மையை என்னாலியன்ற அளவுக்கு வெளிப்படுத்தினேன்.

எனது திரையுலக வாழ்க்கையில் 'ஒருதலை ராகம்' ஒரு நல்ல திருப்பம். அதிர்ஷ்டமும், போதிய ஆதரவும் இருந்தால் இத்துறையில் தொடர்ந்து வெற்றி பெறுவேன்''

பேட்டி: ஞாயகன்
புகைப்படங்கள்: மன்னை மூர்த்தி




சித்த வைத்தியமோ, ஆயுர்வேதமோ சொல்லாத எதையும் அலோபதி சொல்லிவிடவில்லை. புதிதாக மேலும் சில விஷயங்களை அது கண்டுபிடித்திருக்கலாமே தவிர, முற்றிலும் சித்த வைத்தியத்தை அது புறக்கணித்துவிட முடியாது.

சர்ப்பகந்தி செடியில் இருந்து, 'சர்பாஸில்' தயாரிக்கின்ற அலோபதிக்கு, சித்த வைத்தியம்தான் தாய்.

தேரையார் பாடலிலும், பிற சித்தர்கள் பாடலிலும் சில செய்திகள் காணக் கிடக்கின்றன.

தூங்கும்போது இடது கையில் தூங்கினால், இருதயம் பத்திரமாக இருக்கிறது.

ஆறு மாதங்களுக்கு ஒரு முறை பேதி ஆவதற்கும், மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வாந்தி வருவதற்குமே மருந்து சாப்பிடச் சொல்கிறது ஒரு பாடல்.

'நீர் சுருக்கி, மோர் பெருக்கி, நெய் உருக்கி உண்பவர்தம் பேருரைக்கிற் போமே பிணி' என்கிறது ஒரு பாடல்.

தண்ணீரைக் கொதிக்க வைத்து, பின் ஆறவைத்துச் சாப்பிட வேண்டும்; மோரில் வெண்ணெயை முழுக்க எடுத்துவிட்டு நிறையத் தண்ணீர் கலந்து நீர்மோராகச் சாப்பிட வேண்டும்; நெய்யைக் கெட்டியாகப் போட்டுக்கொள்ளக் கூடாது.

'ஆவாரை பூத்திருக்க சாவாரைக் கண்டதுண்டோ' என்கிறது ஒரு பாடல்.

ஆவாரையில் பொன்னாவாரையே சிறந்தது. இது கிராமங்களில் எங்கும் கிடைக்கும். பொங்கலுக்கு உபயோகப்படுத்தும் மங்கலப் பொருள் இது.

காம்பு இலை சேராமல் இந்தப் பூவைக் கிள்ளி எடுத்துக் கூட்டுக்கறி வைத்துச் சாப்பிடலாம். காயப்போட்டு இடித்து டிகாக்ஷன் இறக்கிப் பாலில் கலந்து சாப்பிடலாம். ஆவாரம்பூ காப்பியில் ஆயுள் நீடிக்கும்.

உடம்பு பருமனாக உள்ளவர்கள் தினமும் வாழைத் தண்டோ, கீரைத் தண்டோ சேர்த்துக் கொண்டு வந்தால், பின்னாளில் 'கிட்னி'த் தொல்லை வராது.

அடால்ப் ஹிட்லரின் கருத்துப்படி சைவ உணவில் இருக்கும் சத்து மாமிச உணவில் இல்லை.

மாமிச உணவு சாப்பிடும் பிராணிகள் எல்லாம் நாக்கைத் தொங்கப் போடுகின்றன. உதாரணம்: சிங்கம், புலி, நாய்.

சைவ உணவுப் பிராணிகளுக்கு நாக்கு தொங்குவதே இல்லை. உதாரணம்: யானை முதல் மான் வரை.

சர்க்கரை வியாதிக்காரர்களை பாகற்காய் சேர்த்துக்கொள்ளச் சொல்கிறார்கள். ஆனால் பாகற்காய் அளவு கடந்து போகாமல் பார்த்துக் கொள்வது நல்லது.

முட்டைக்கோஸ், பாங்கிரியாஸுக்கு நல்ல மருந்து.

'தினசரி இரண்டு கட்டுக் கீரை சாப்பிடுவதிலேயே என் உடம்பு பளபளவென்றிருக்கிறது' என்கிறார் எம்.ஜி.ஆர்.

'நொறுங்கத் தின்றால் நூறு வயது' என்கிறார்கள் நம்முடைய மூதாதையர்கள்.

உடம்பு உஷ்ணமாகாமல் பார்த்துக் கொண்டால் வாயுத் தொல்லை வராது. எந்தச் சாப்பாட்டையும் ஏற்றுக்கொள்ளும்.

எதையும் கொதிக்கக் கொதிக்கச் சாப்பிடக் கூடாது. நடுத்தரச் சூடாக இருக்க வேண்டும். சூடான ஒன்றைச் சாப்பிட்டுவிட்டு, உடனே ஐஸ் தண்ணீரைக் குடித்தால், பல்லில் உள்ள எனாமல் போய், வலி உயிர் போய்விடும். பிறகு அந்தப் பல் எதற்கும் பயன்படாது.

கிராமத்தில் இருப்பவர்கள் குளத்தில் விழுந்து குளித்தால், அதைவிட ஆரோக்கியத்துக்கு வேறு எதுவும் தேவையில்லை.

இயற்கையான சூழ்நிலையிலும், சாப்பாட்டு முறையிலும் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

சித்தர்கள் சொல்வதைக் கடைப்பிடித்துப் பாருங்கள்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

# எல்லா தேர்வுகளிலும் தேர்ச்சி பெற்றது!

# ஃபோர்ட் 3600

- இணையில்லா செயல் திறன்
- இணையில்லா நம்பிக்கை
- இணையில்லா சிக்கனம்



**எஸ்கார்ட்ஸ் லிமிடெட்**
ஃபார்ம் எக்விப்மெண்ட் டிவிஷன்,
18/4 மதுரா ரோடு, ஃபரீதாபாத்

EL-5140 TAM A

REGISTERED No. M. 4392
Registered as a newspaper in Sri Lanka

# ஒரு தலை ராகம்!



மேலே படத்தில் நீங்கள் காண்கிற இப்ராஹிம் தயாரித்து இயக்கிய "ஒருதலை ராகம்" இளைய தலைமுறையினரின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு சக்கைப் போடு போட்டுக் கொண்டிருக்கிறது. இதமான கல்லூரிக் காதல். அவன் தன் காதலை வெளிப்படுத்தும் போது அவள் கல்போன்று இறுகிக் கொள்கிறாள். அவள் நெகிழ்ந்து வரும்போது அவன் இல்லாமல்போய் விடுகிறான். இந்த எளிய கதை படமாகி அடைந்த வெற்றிக்குத் துணை நின்ற பலருள், இப்ராஹிம், கதாநாயகன் சங்கர், கதாநாயகி ரூபா ஆகியவர்களைச் சந்தித்து அளவளாவிய போது:

**இப்ராஹிம்:**

நீண்ட நாட்களாக என்னுள்ளத்தே ஒரு பொறி. என்றாவது ஒரு நாள் சினிமாத் துறையில் ஈடுபட வேண்டும்; பெயர் நிலைக்கும்படி அழுத்தமாகவும், கலைரசனை உள்ளதாகவும் ஏதேனும் செய்ய வேண்டும் என்கிற ஆர்வம் கடர்விட்டுக் கொண்டிருந்தது. எனது தாகம் 'ஒருதலை ராகம்' படம் மூலம் தணிந்ததில் எனக்குப் பூரண திருப்தி.

(தொடர்ச்சி 62 பக்கம் பார்க்க)